# அழகு சிரிக்கின்றது

---

விழிகளும் விருந்துண்ண -அழகோ காளை விழிகளுக்குப் பெருவிருந்து
கண்டு நெஞ்சமும் சுவைக்க-கன்னியோ காணத் திகட்டாத அழகின் அமுது
செவிகளும் இசையாய் இரசிக்க கனிமொழிகளில் முக்கனியின் இனிப்பு
காமனும் மயங்கிட கட்டழகோ பிரம்மனின் அரிய படைப்பு



கயல் விழிகளோ காதல் கலையரங்கு, செவ்விதழ்களில்
கனிரசத்தின் புது விருந்து, பார்த்துக் கண் மயங்க
பூத்த எழிலில் மனம் மயங்க-வார்த்தை
கவியெழுத-நெஞ்சம் காதலில் வீழ்ந்ததே

பூவையில் ஆயிரம் பூ வாசங்கள்
பூத்த மலரில் அழகின் புதுக்கோலங்கள்
பார்த்து சுவைத்து பரவசத்தில்-கம்பனாய்
கண்ணதாஸனாய் கவி பாட ஏங்கும் மனங்கள்

பங்கய முகத்தில் நாணத்தின் குங்குமம்
மையெழுதிய பூவிழிகளில் காதலின் சங்கமம்
மூன்றாம் பிறை நுதலில் முத்தாய் சிறு பொட்டு
பூத்த புன்னகையில் ஒளிரும் முல்லை மொட்டு

கன்னங்களோ கனிந்த கிண்ணம் பழங்கள்
கார்குழலிலோ மல்லிகையின் சுகந்தங்கள்
சங்கு கழுத்தின் தங்கச் சரங்கள்
மங்கல நாண் பூண வசந்தத்தின் அழைப்புக்கள்

சந்தன மேனியின் அழகுக் கோலங்கள்
பூசியே பூஜித்துக் கொள் எனும் வேண்டுதல்கள்
நூலிடையில் மணிமேகலை மினுங்க,
பொன்மார்பில் மயக்கும் செம்மாங்கனிகள

சிற்றிடையும் செவ்வாழைத் தொடைகளும் அசைந்திட
நடையோ புது நாட்டியம்- இசையோடு நலம்தான என் இயம்பிடும்
வெள்ளிக் கொலுசுகளோ காதலின் கட்டியம்

வெண்பட்டுத்த கலைமகளை-கண்பட்டு காதல் நோயுற்று
-காமன் கணைபட்ட மானாய்த் துடிக்கும் என் மனது-
மலைத்தேனாய் இனிக்கும் அவளோ இளசு

குடம் எடுத்த அழகை கண்டு-மனம் காதல் படமெடுக்க
இடை சிறுத்த அழகை இதயம் அணைக்கத் துடிக்க
எழில் பார்த்த பார்வையில்-என் மனம் காதல் வலை
பட்ட மீனா, கணை பட்ட மானா? காமனே நீ சொல்

கண்பட்டு காதல் வசப்பட்டு நெஞ்சம் துடிக்க-
காதல் தேன் சிட்டு கட்டழகால் எனை வதைக்க
புண்பட்டும், கன்னி மனம் புதுமொட்டு

என்மனம் வியக்க, செம்பட்டுடுத்து செவ்விதழ்களில்
தேன் தொட்டெடுத்து புண்பட்ட நெஞ்சுக்கு புன்னகையால்
ஒத்தடம் தந்தாள்- குடத்தில் நீர் அள்ளி, எழில்கொஞ்சும்
விழிகளால் என்னை அள்ளி தன் நெஞ்சை நிறைத்த வஞ்சி
குறவள்ளியோ காதல் கள்ளியோ? காதல் நெஞ்சே சொல்!

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-21-7-2023

# அன்பின் வழி

---



அன்பின் வழியே அமைதி, தியானமே ஞானத்தின் வழி
ஆணவமழிதலே அகப்புரட்சி
உண்மையே விடுதலை-நாம் இறை மக்களே
**நம்மை நாம் அறிதலே மெய்ஞானம்.**

அல்லா, யாவே, அன்புத் தந்தை என இறைவனை
அழைக்கச் சொல்லித்த தந்த மதங்கள்
அன்பிழந்து ஏழையானதோ?-நீதி மறந்து
வன்முறையின் வழியானதோ?

பேச்சுச் சுதந்திரம், எழுத்துச் சுதந்திரம் மானிட உரிமை
என முழங்கிய பிரெஞ் ஆசிரியர் சாமுவேல் படி-காட்சிப்படுத்திட
நபிகள் நாயகமோ வகுப்பறையில் கேலிச் சித்திரம்
பண்பட்ட ஆசிரியரை கொன்ற, புண்பட்ட மாணவ மனம்

மனிதமும், மதவிழுமியங்களும் மண்ணில் சாய
மனித உரிமைப் போராளியை வீழ்த்திய படுகொலை
மதப்பயங்கரவாதம்,அன்பிறைவனை நிந்திக்கும் அராஜகம்
அபினியும், போதைவஸ்துமான மதவாதம்

அராஜகம் நீதி என்றால் -ஐவேளை தொழுதும்
சகோதரத்துவமும், சகிப்புத்தன்மையும்
வெற்றுப் போதனைதானோ?-சட்டமும்,
நீதியும், கடந்த கொலைவெறி மதபக்திதானோ?

மதவாத மதங்களில் மனதை குணமாக்க மருந்தில்லை
ஆலயத்தில் கழுத்தறுத்துக் கொல்லப்பட்ட பக்தர்களும்
அருட்பணியாளரும், நாய்களால் சுட்டு வீழ்த்தப்பட்ட மனிதர்களும்
குர்பானாகுமோ?- கொலைகளும் ஜிகாத்தாகுமோ?

மதமோ சார்பு நிலை கோட்பாடு
இறைவனோ அன்பு, உண்மையின் நிலைப்பாடு
பலியை அல்ல இரக்கத்தை வேண்டும் இறைவன்
உயிர்கள் அனைத்துக்கும் தகப்பன்

பறவைகளுக்கும், விலங்குகளுக்கும் மதங்களில்லை
வான்நோக்கி பூத்த மலர்களும் உள்ளிருப்பின் மலர்வைச் சொல்ல
ஆணவம் கழித்து தன்னை அறிந்தவர் உயிர்த்து வானகம் செல்ல
தன்னை அறிந்தவர் ஞான புத்தராய் ஆனந்த அமைதி கொள்ள
வாழ்வு ஒரு லீலை என்றே புல்லாங்குழல் இசைக்கும் கண்ணன்

பற்றறுத்து வினை செய்யுங்கள் கண்ணன் சொல்ல
இருப்பதை எல்லாம் கொடுத்து - இரவில் ஏழையாகி
அல்லாவை நாளும் நம்பி வாழ்ந்த நபிகள் வாழ்வும்
நம்பிக்கை கொண்டோரால் நலிவதென்ன?

மதவாதம் கொன்ற உயிர்கள்தான் எத்தனை?
புரிந்த சிலுவைப்போர்கள்தான் எத்தனை
இறைவா உன் அமைதிக்காய் எம் பிராத்தனை

ஷாலோம், சலாம் அலேக்கும், ஓம் சாந்தி
சப்பே தத்தா பவங்க துதி தத்தா
(சகல உயிர்களும் நலமாய் வாழ பிராத்திக்கின்றேன்)
லோக சமஸ்தா சுகினா பவந்து
(இன்பமே சூழ்க எல்லோரும் நலமே வாழ்க)
உன்னதங்களில் இறைவனுக்கு மகிமையும்-பூவுலகில்
நல் மனத்தவருக்கு அமைதியும் வெற்று வார்த்தைகள்தானோ?

நட்சத்திரம், சிலுவை, பிறை, திரிசூலம்,தர்மச் சக்கரம் எல்லாம்
மதச்சேற்றில் புதைந்து குருதிக்கறைபட, அன்பு இறைவனும் -
மதவாதிகளிடம் பணயக் கைதியோ?, எகிப்தியரை வதைத்த இறைவனும்
குருஷேத்திரக் கண்ணனும் வன்முறையின் வடிவங்களா?

வாளெடுக்கும் மனிதர்களில் வாழும் இறைவனில்லை
வாழும் மதங்களில் அன்பிறைவனும் வாழவில்லை
காயீன் ஆபேலைக் கொல்லும் இழிநிலை ஓயவில்லை
அன்பும், உண்மையும் வாழ்வானால் வாழ்வே மெய் வழிபாடு
மதவாதிகளுக்குத் புரியவில்லை

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-21-7-2023

# அந்தி மந்தாரை

---

நெஞ்சைத் திருடிய அழகி அந்தியில் வருவாள்
பூப்பந்து விளையாட, எண்ணிக் களிக்கும் இதயம்
வண்ணப்பூவாய் மலரும், புள்ளிக் குயிலாய்
கானம் பாடி நெஞ்சம்,கலாப மயிலாய் ஆடிக்களிக்கும்



வீசு தென்றலும் கன்னியின் வாசம் சுமந்து
சுவாசம் கலந்து-நெஞ்சை அள்ளும்,
வாச முல்லையும் நெஞ்சில் படர,
பாரியின் தேராய் இதயமும் துள்ளும்

வட்ட நிலவை-சின்னப்பொட்டாய்-மதி
நுதலில் வைத்த தேன்நிலவு
சுட்டும் சுடர் விழிகளால் என் நெஞ்சில்
காதலை எழுதிய புது உறவு




அந்தியில் வரும் காதல் நிலவு- முந்தி வர
வான்மேகமே தூது செல்-சுந்தரியை காணாது
அந்தி மந்தாரை பூக்காமல் சோரும் கதையை
தென்றலே நீயும் எடுத்துச் சொல்

குயில் மொழியாள் கொஞ்சிக் கதை பேச
கயல் விழியாள் கண்டு நெஞ்சம் காதல் பசியாற-
கம்பனாய் கவி பாடும் மனம்
காதலாகி மெழுகாய் உருகும் தினம்.

மையெழுதி, மலர் சூடி, மணம் வீசம் முல்லை மலர்,
மானாய்த் துள்ளி விளையாட, காதலுக்கு மொய்யெழுதி,
கவிபாடி, கண்களால் உறவாடி களிகூரும்
கண்ணாளன் நெஞ்சிலோ ஓயாத காதல் தவம்

வண்ண நிலவின் ஆட்டத்தை, வான் நிலவும் கண்டு இரசிக்க
செவ்விதழ் சிந்தும் செந்தேன் புன்னகையில் என் மனம் மயங்க
நெஞ்சுக்குள் பூத்தாடும் அந்தி மந்தாரை, பூப்பந்தாடும்
கன்னி விழிகளிலோ நான் படிக்க காதலின் கீதை

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-21-7-2023*

# ஆயுதக் கோலங்கள்

---

ஆயுதப்புரட்சி அமைத்த நல்லரசுகள் ஏதுமில்லை
புரட்சிக்கோலமெங்கும், வன்முறையும், குருதியும்,
கண்ணீரும், பிணமுமான அலங்கோலங்களே

இலஞ்ச ஊழலும்-அதிகார துஷ்பிரயோகங்களும் மலிந்த
ஜனநாயகமும் வன்முறையின் விகாரமே-ஆட்சியை
நீடிக்க அரசியலமைப்பை மாற்றுவது சர்வாதிகாரமே

காடுகளில் தொடங்கிய ஆயுதப்புரட்சி களவெற்றிக்குப் பின் நாடாள
அரியணையும், மாளிகையும் தலைவர்களுக்கு என்றானது
கழுத்துச் சங்கிலியோடு எச்சில் சோறுண்டு, எதிரியை மோப்பம் பிடிக்க,
உழைக்கும் வர்க்கமோ ஆயுதமேந்தி காவல் நாயாய் வாயிலில் காய
பொதுவுடமையும், சமதர்மமும் மாயை என்றானது

வன்முறையால் மண்ணும், கடலும் சிவந்து நொந்திட,
வன்புணர்வால் பூமித்தாயின் வளங்கள் சீரழித்திட
கடலும், காடுமழிய, ஓஸோன் மண்டலம் சிதைய
காலநிலை மாற்றங்களால் பூமி கொதித்தது

அடி வயிற்றில் அணையாத் தீ எரிய
வெள்ளம்.புயல், பூகம்பம், சுனாமி என,
அரக்கரை அழித்திட -துர்க்கையாய்
பூமித்தாய் போராடும் காலமிது

ஆணவத்தை தூண்டி-கல்லை அப்பமாக்க மொழிந்த
அலகையை கடிந்து, மனிதன் அப்பத்தினால் மட்டுமல்ல
ஆண்டவன் மொழிகளால் வாழ்கிறான் அகக்கிளர்சியாளனுக்கோ
சிலுவை மரணம், வன்முறையாளன் பரபாஸீக்கோ விடுதலை-

அகிம்ஸாவாதி-எதிரிக்கும் அன்பு எனப் போதித்த புரட்சியாளன்
ஆடிடத்தொட்டிலின்றி தொழுவத்தில் பிறந்த ஏழை
நாடோடி போதகனாய்- அலைந்து அன்பின் அகக்கிளர்ச்சியை
ஏழைகளுக்கும், ஒடுக்கப்பட்டவருக்கும் நற்செய்தியாக்கிய காளை

அடங்கிட கல்லறையின்றி இரவல் கல்லறை கொண்ட மாமனிதன்
அன்னையும், அன்பு இதயங்களையும் சொந்தம் சொன்ன ஏழை
காட்டுப் புஷ்பங்களையும், ஆகாயத்து பறவைகளையும் கண்டு
களிகூர்ந்து இறைவனை புகழ்ந்த கவிஞன்
அன்பே தெய்வம் என முழங்கிய அருளாளன்

தொழிலாளர் புரட்சிக்கு-போராடத பூர்ஷ்வா-இயேசு-
“சௌந்தர்ய உபாசகன் ” செஞ்சட்டைக் கவிஞர் இன்குலாப்
இயேசுவை தூற்றிட, ஆழத்தில் வலை வீசாத மீனவன்,
ஆன்பின் சௌந்தர்யம் அறியாத சிவப்பு நிறக்குருடன

விழிப்புணர்வின் உயர் தளத்தில் இயேசு
பகுத்தறிவின் புரட்சித்தளத்தில் கவிஞன்
ஆன்மீகம் அறிவுகடந்த அனுபூதி
பகுத்தறிவுச் சிந்தனையாளனாய்க் கவிஞன்?

பூவின் அழகை இரசிப்பவன் கவிஞன்
அறுத்து ஆய்பவன் விஞ்ஞானி
மனம் கழித்து-சாட்சியாய் பார்பவனோ ஞானி

உண்டு குடித்து கலவி செய்து இனம்பெருக்கி
உறங்கி எழுதல் மட்டும் வாழ்வல்ல
எல்லாம் சடப்பொருளும் அல்ல
மரணமும் வாழ்வின் முடிந்த நிலையல்ல.

மார்க்ஸ், லெனின், மாவோ-முத்தேவர்களாக
ஆயுதமே தர்ப்பை பூணுலோ-செஞ்சட்டை
ஆயுத வேதியரின் வன்முறை வேள்வியில்
பொதுவுடமைச் சமதர்த சமுதாயம் மந்திரம்
சிவப்பே சுந்தரம் -முழக்கம்

மார்க்ஸிய துதி பாடும் கவிஞன்?, லெனின், மாவோ,
ஸ்டாலின் இரத்தக் காட்டேறிகளை வழிபடும் கபாலிகன் ?
ஆயுதப் போராட்டமே புரட்சி வேதம், வேதமொழி
சுமஸ்கிருதம் என ஓதிடும்- சிவப்புச் சங்கராச்சாரி?

அபினியும், போதையுமாய் மதம், மார்க்ஸிய சித்தாந்தம்
பொதுவுடமைவாதிப் புரட்சியாளர்க்கோ மாறாத வேதம்
சமத்துவத்தற்கான புரட்சி, குருதி சிந்திச் சிவந்து
சர்வாதிகாரமாய் மாறியதோ சரித்திரம்

உழைக்கும் வர்க்கம் ஏங்கிய கம்யூனிஸ சொர்க்கம் கனவாக
மனித உரிமையிழந்து-மானுடம் எரிநரகில் வாட-
வயல் உழுது, பால் ஈந்து வாய் பொத்தி வாழ்ந்தால்-பசுவே
தொழுவம் உனக்கு-இல்லையேல் துப்பாக்கியும், தூக்கு கயிறும்
நீதியான கம்யூனிஸ அராஜகம்

வட கொரியாவில்-பிணவாடை நாறிட, செஞ்சீனத்தில்-
சர்வாதிகார முதலாளித்துவம் விகாரம்பெற
புரட்சியின் பரிணாமம் சமத்துவம் பகல் கனவானது-
சர்வாதிகாரம் யதார்த்தம் நிஜமானது

உன்னைப்போல் உன் அயலானையும் நேசி
மனிதர் உங்களுக்கு என்ன செய்யவேண்டும் என
நீங்கள் விரும்புகின்றீர்களோ
அதையே நீங்களும் மற்றவருக்கு செய்யுங்கள்

அன்பிலும் மேலான விதி உண்டோ?-அன்பு, உண்மை
மனித விடுதலைக்கான பாதை, தனி மனித அகக் கிளர்ச்சியின்
கீதை, பொன் விதியோ மதம் கடந்த ஆன்மீகம்-
மார்க்ஸ் அறியாத வேதாந்தம்?

ஊன்னை நேசி, உனக்கு நீயே ஒளியாகிப் போ
உனக்கு நண்பனும் நீ, உனக்குப் பகைவனும் நீ
உன்னை உன்னாலே உயர்த்திக்கொள்
தனி மனித விடுதலையால் வர்க்கபேதங்கள் மறைந்திட
போராட்டங்களும் வன்முறையும் ஒழிந்திடும்

அகக்கிளர்சியாளனின் ஆழ்ந்த கருத்துக்களை
அறிஞர் இன்குலாப் அறியாதது வேதனையே
தியானத்தில் கொள்ளாததும்
சிவப்புச் சிந்தனைக்குச் சோதனையே

சிலுவையிலும், தந்தையே தாம் செய்வது இன்னதென
இவர்கள் அறியார், இவர்களை மன்னியும்
அறிந்த இறைவனை தொழுத மனம்
அறம் மறந்தவர்க்காய் மன்னிப்பை இரந்த தேவகுணம்
செஞ்சட்டைத் தோழர்களுக்குப் புரியாத தேவராகம்

மரணத்திலும் மனித நேயமோ வானுயர்ந்திட
கொலைஞரோ இருண்ட பள்ளத்தில் புதைந்திட
செம்புரட்சிக்கு தன் குருதியை சிந்திய தலைவன்

தொழிலாளவர்க்கத்தின்-குருதியையும், உழைப்பையும்
உறிஞ்சிக் கொழுத்திடும், முதலாளித்துவ அட்டைகளை நசுக்கிட
ஆயுதப் போராட்டமே ஒரே வழி, எளியோரை ஏமாற்றிப்
படையும், பகடைக்காய்களுமாக்கி, களப்பலி கொடுத்த
சிவப்புத்தலைவர்கள் அரியணையில்-அமர்ந்திட,
உழைக்கும் வர்க்கம் கால்மனையில் வாடிட கலைந்த கனவுகள்

உண்மையே விடுதலையளிக்கும், உனக்கு  நீயே ஒளியாகிப்போ
விடுதலை -தனி மனிதனின் தேடல் கும்பலில் தேடுதல் இல்லை
கூட்டம் ஞானம் பெற்றதில்லை

விழிப்புணர்வின் உயர் தளம் அறியாத செஞ்சட்டை கவிஞன்
அறிந்ததெல்லாம் செம்புரட்சியின் புதுமையாக,
முதலாளித்துவ கொடுமையாக, அன்பின்
மேன்மை அறியாத மடமை சிறுமை

கல் மனதை அன்பினால் கனியவையுங்கள்
அகிம்சையே அன்பின் வழி-உண்மையே உயர் புரட்சி நெறி
வாளெடுத்தவன் வாளால் மடிவான் மாறாத நீதி

தன் குருதி சிந்திய மாமனிதன் மனங்களில் வாழ
பிறர் குருதி சிந்திய கூட்டத்தலைவன் கல்லறைகளில் நாற
-செம்புரட்சிகள் சேற்றில் மலர்ந்த வெண்தாமரை அல்ல
உள்ளக் கமலமே உத்தமனார் வேண்டுவது

அன்பு மணங்கமழ-வண்டும் தேனீயும் அமுதருந்தி
ரீங்காரம் பாட ஆண்டுகள் இரண்டாயிரம் கடந்தும்
அன்பு மனங்களில் வாழும் இறைவனாய்
புத்தர், இயேசு பெருமான்கள்

மார்க்ஸிய பொதுவுடமைச் சமுதாயம்-ஆதிக்கிறிஸ்தவர்களின்
தோற்றுப்போன வேதாந்தம், அன்பில்லாச் சமூகம் இன்புறாது
ஆயுதங்களால் சமத்துவம் வந்துவிடாது

வார்த்தைகளால் வரண்ட நெஞ்சங்களை உழுது
இறைவார்த்தையை விதைத்தவர்-இறந்தும்
உயிர்த்தே அன்பு மனங்களில் வாழ்கின்றார்
மரணம் உடலுக்குகே-கருணை மனங்களுக்கு
ஏது மரணம்-என்றும் நிலை வாழ்வே

மார்க்ஸ், லெனின், ஸ்டாலின், மாவோ, பிடெல்
கல்லறைகளில் புழுவுண்டு நாறிட-உலகில்
பொதுவுடடை, சமத்துவம் வாழும் நாடேது?

எல்லாம் பகல் கனவானபோது மார்க்ஸியம் வாழ
மனங்களில்லை, உண்மைக்குத் தோழர்கள் யாருமில்லை
கனவுல கம்யூனிஸ அரசில், இன்குலாப்
ஆஸ்தானக் கவிஞரோ? அடி வருடியா?

மீனவரையும்,. விபச்சாரியையும் சீடனாக்கி-கூழாங்கல்லை
வைரமாக்கிய மாமனிதன், பாவிகளும், ஏழையரும்- இறைவனை
தம் உள்ளத்தில காண, மனங்களை உழுது பண்படுத்திய
உழவன் மாபெரும் புரட்சியாளன் அன்றோ?

நரிகளுக்கு வளைகளும், ஆகாயத்து பறவைகளுக்கு
கூடுகளுமிருக்க தலைசாய்க இடமின்றி- கொடு வெயிலில்
யூதேயாவின் புழுதி படிந்த சாலைகளில்
நற்செய்தி விளம்பிய நாடோடிப் போதகன்-தனி மனித
ஆன்மிகக் கிளர்ச்சிசியாளனேயன்றி ஆயுதப்புரட்சியாளன் அல்ல
"**டாஸ் கபிடால்**" -மார்கஸ் அறிவாரே?

எதிரியையும் அன்பு செய்து நண்பனாக்கியவனுக்கு எதிரி ஏது?
எதிரி. நண்பன் பேதம் கடந்தவன் என்றும் நிராயுதபாணி
சத்தியமே அவன் பிரம்மாஸ்திரம்

செஞ்சேவல் கூவி, ஏழையர் உலகம் விடிவதில்லை-
வரலாற்றில் விடிந்ததுமில்லை
ஆயுத முழக்கமெல்லாம்-அடக்குமுறையே
குழிமுயலாய் அப்பாவி மானுடம் ஒடுங்கிட
அடிக்கடி முழங்கிடும் இடிமுழக்கங்களே

பகைமையை பகைமையால் தணிக்கமுடியாது
பகைமையை அன்பினால் வெல்லுங்கள்
இதுதான் தொன்று தொட்டு வருகிற தர்மம்

நிறம்மாறிய சிவப்பு தலைமைத்துவம் சர்வாதிகாரமாய் நிலைத்ததே
வரலாற்று உண்மை, ஷேகுவாரா வாழ்ந்திருந்தால்
பிடெலின் நிஜரூபம் கண்டு நெஞ்சம் கொதித்திருப்பான்
செஞ்சீனம் மாறிட -மாணவரோடு சேர்ந்தே
புதியதோர் புரட்சி தொடங்கியிருப்பான்?

புதைந்த கல்லறைக்குள்-புழுவரிக்க புதைகுழியில் மறைந்த
சிவப்புத் தலைவர்கள், மறைந்தும் மனிதமனங்களில்-இன்றும்
வாழும் அன்புத் தெய்வங்கள், அன்பும், உண்மையுமே அகப்புரட்சி
தனி மனித விடுதலையே யுகப்புரட்சி

பாபர் மசூதி இடிந்தபோது மனம் உடைந்தாய்-
கவி படைத்தாய், பாபர் இடித்த இராமர் கோயிலுக்காய்-
துளி கண்ணீர் வடித்தாயோ கவிஞனே?
ஆதாரம் தேடிக் களைத்தாயோ?

சாத்தானின் வசனங்கள் சால்மான் ருஷ்டிக்கு இறை வரமாக
புரட்சி எழுத்தாளன் தலையோ இஸ்லாமின் பரிசாக-
கொதிக்காத உம் குருதி சிவப்புத்தானோ?

கங்கையைப் பிணங்கள் சாகடிக்க
காவிரி மங்கையின் கால்களை கன்னடம் முடமாக்கிட
கலாமின் அணுவாயுதம் அச்சத்தை மூட்டிட, வாய் மூடிய
உன் செம்பேனா -இந்திய வல்லரசுக் கனவுக்கு துதி பாடிட
வல்லமைதான் சித்தாந்தமோ? அன்பே சிவம் வேதாந்தமோ?

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra-21-7-2023*

# அக்கினி அம்புகள்

---

சந்தக்கவி புனைதல் எம் அழைப்பல்ல
*“பாஞ்சஜன்ய சங்கின் முழக்கமாய்”*
சத்தியத்தின் அறைகூவலாய்-
புதிய குருஷேத்திரத்திற்கான அழைப்பிது

மாதர் அழகைப் பாடி-மதிவதனம் என கூறி
மந்தமாருதத்தில் காதலியின் கூந்தலைக் கோதி ,
வாசம் நாடி-இயற்கையா?, இல்லை செயற்கையா
என வாதிடல் பூர்ஷீவா இலக்கியமாகலாம்.

இறையனாரும், நக்கீரனும்
சொற்குற்றம், பொருட் குற்றம் தாண்டி
சாதிய நிலை நின்று-வாதிடுவது கலையும்,
திருவிளையாடலுமாகலாம்

கும்பி வாடும் ஏழையின் பசி தீர்க்க-குரல் கொடுத்து-
இரத்த வெறியருக்கும், இனவாதிகளுக்கும் எதிராய்
மனச்சாட்சியை விழிக்கவைக்க புதிய போர் தொடுக்கும்
அக்கினி அம்புகள் என் படைப்புக்கள்

இவை மாலைக்கும், கைதட்டலுக்குமான
மாதவியின் நடனமல்ல-பாண்டியன் அநீதிக்காய்
சிலம்பெடுத்த கண்ணகியின் அறச் சீற்றங்கள்.

எதுகை மோனை கொண்டு-கவிதைக்கு
ஏற்றம் இறைத்தல் நம் பணியல்ல
என் எழுத்து கவிதையல்-இது காலத்தில் விழித்த
ஓர் எரிமலையின் குமுறல்

ஓதுவதை நாளும் ஓதிடும் வரண்ட வேதமல்ல-
மனச்சாட்சியைப் புரட்டிப் போடும் புரட்சி நெம்புகோல்-
சிந்தனையை தூண்டி, வந்தனை, நிந்தை தாண்டி,
விழிப்புணர்வை தூண்டிடும் புரட்சியின் செங்கோல்.

எழுதுகோல் எனும் உழவாரத்தால்
காடு மண்டிய மனங்களை உழுது உண்மையை தூவிடும்
உழவனின் சின்னஞ்சிறு முயற்சி-இது அகக்கனல்-
குளிர் காய மூட்டிய நெருப்பல்ல

வெறி கொண்ட வேங்கைக்கும்
நெறி சொல்ல எம் பேனா அஞ்சவில்லை
பலி கொள்ளும் அரியும் மனந்திரும்பிட
யோவானாய் கர்ச்சிக்க மறக்கவில்லை

இருள் சூழ்ந்த உலகில் ஏற்றிய மெழுகுதிரி
இது கதிரல்ல-நிலவல்ல-காலம்
ஏற்றிய சிந்தனைச் சுடர்

வீசும் திசையெல்லாம் ஆடிப் பறக்க காற்றாடியல்ல
வீழ்ந்தாலும் விழுதுகள் சாய்ந்தாலும்-வித்துக்களால்
அவதாரம் எடுக்கும் ஆலவிருட்சம்

சந்தக் கவிதை புனைந்து சிந்தை மகிழத்
தமிழை வாழ்திடும் பெரியோரே-சங்கம் வளர்த்த தமிழுக்கு
வெள்ளைப் புலவன் வீரமா முனிவனும், போப் அடிகளும்
இன்புற்றே அருந்தொண்டு புரிந்தார்
.
கம்பனும், வள்ளுவனும், இளங்கோவும்
காவியம் பாட-பாரத விடுதலைக்காய்
சுதந்திரக்கனல் எடுத்து கவி படைத்தான்
புரட்சிக்கவிஞன் பாரதி.

நாடு விட்டு நாடு ஓடி-நலமாய் கவிதை பாடி
எந்தையும் தாயும் வாழ்ந்தது இந்நாடே
சிந்தையில் சந்தம் எழ கவி பாடுதல்- ஒரு வழி

நெய் வளர்த்த தீயில் நீராடி-இனவாதம்-
தமிழ் பயங்கரவாதம் தாண்டி, இழப்புகளின் கண்ணீரையும்
உறவுகளின் செந்நீரையும்-மாலையாய்க் கட்டி
கண்ணில் கங்கை பெருக நெஞ்சில் சோகச் சிதைகள் எரிய
பூபாளம், மோகனம் பாடாமல்-ஆழிக்கூத்தாடல் எம் வழி

கொட்டிடும் கொரோனாவின்
போர் முரசை கேளாமல்-தூங்கிடும் இறைவனை
தூங்கியது போதும் எழுந்திடு என
தூக்கம் கலைக்கும் இடி ஓசை எம் மொழி

மந்திரம் ஓதி, சடங்கினை நடத்தி மண்டியிடத் தூண்டும்
மதவாதம் கடந்து,-உண்மை, அன்பை வாழ்வாக்கி
வாழ்வினால் உண்மை இறைவனை வழிபட-உள்முக
தீர்த்த யாத்திரைக்காய் விழிப்புணர்விற்காய் எம் அழைப்பு,

அல்லாடும் ஏழை உலகில் இருபது செல்வந்த நாடுகள்
இருப்பதை விற்று ஏழைக்கு கொடுத்தால் வறுமை போகும்-
திருச்சபையிலோ கோடிச் செல்வங்கள் -பூப்படையாத
கன்னிக்கு சுயம்வரங்கள் வேதனை, வெட்கம், துக்கம்

சுத்தியத்தின் சாட்சியத்தை தூக்கிலிட்டது யூத மதவாதம்
மீட்பு என்று கொண்டாடுவது பவுலின் கிறிஸ்தவம்
கள்வர் குகையான ஆலயங்கள் உண்மையின் வாழிடமாக
சத்தியத்தின் சாட்சியமாய் விழித்தெழுங்கள் தோழர்களே

நெஞ்சில் கனல் எடுப்போம் மூட நம்பிக்கை அழிய
சொப்பனத்திலும் எரிமலையின் வடிவெடுத்து-அரிமாவாய்க்
கர்ச்சித்து சீறும்புலியாய் போராட முடிவெடுப்போம்

இதோ இயேசு- உண்மையின் வடிவெடுத்த ஓங்காரம்
உதிரம் சிந்தி தம் உயிர் ஈந்த அறப்போராளி.
அதோ மகாத்மா அரை நிர்வாணப் பக்கிரி-கதிரவன்
மறையாத பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தை கலங்கடித்த செம்மறி
இந்து மதவாதத்தின் பலியாடு

அதோ- குருஷேத்திரத்திலும்
குழல் இசைத்த வேனுகோபாலன்
ஆயுதப் புரட்சியின் அதிசய வடிவம்.

இதோ போதியின் நிழலில்
அமைதியில் அமர்ந்த புத்த பெருமான
அமைதியின் அருள் வடிவம்.

கவிதையின் பரிமாணங்களில் என் படைப்புக்கள்
என்று ஏதுமில்லை-வெற்றுப்புல்லாங்குழல் நான்
இசைப்பவன் இசைஞானி

பாதைகள் வேறு-பயணங்கள் வேறு
எரிக்கும் நெருப்பும்-வேறு
எரியாத நீறும் வேறு-அணைக்கும் நீரும் வேறு
நானும் வேறு-நீயும் வேறு-நம்முள்ளிருக்கும்
சுயமோ ஒன்று-அறிந்தால் சுகமே!

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra-25-7-2023*

# அக்கினிப் பிரவேசம்

கருவான் அரங்கில் கோடி வெள்ளிகள் ஒளிர்ந்திட
வெண்முகில் திரையாய் அலைந்து அழகூட்டிட
இனிக்கும் இரவில் அரங்கேறும் வான்மதியின் நாட்டியம்
பார்த்து இரசிக்க அழகோ பரதத்தின் கலைநயம்

பொய்கையில் கயல்கள் துள்ளி விளையாட-அல்லியும்,
ஆம்பலும் பூத்தாட பார்த்த நிலவின் நாட்டியம்-காதலன்
நெஞ்சில்  காதலாகிக் கனிந்து ஆடிடும் பாவை,
காஞ்சி சிவகாமியை நினைவூட்டிய காவியம்



மலைமகள் ஆட்டத்தில் என்னை மறந்தேன்-
திருமகள் அழகில் என்னை இழந்தேன்-கண்கள்
கலந்து, மனம் காதல் கொள்ள-மழையும்
செம்மண்ணுமாய் கலந்த காதலர் நெஞ்சங்கள்.

மாதவி குலத்து மங்கை,கோவலன் குலத்துக்கு இழிவென்றே
சொந்தங்கள் எம்மைப் பிரித்தே உறவாடத் தடை விதித்திட,
சொந்தங்களை மீறி-என் சொந்தமாய் காதல் பரதமாடி
நாளும் என் நெஞ்சில் உலா வந்த ஊர்வசி

பெருங்குடி மகன் நீ -பொதுமகள் அவள்
குலப்பெருமை காத்திட மங்கையை மறந்திடு
அனல் மொழியால் என்னை வாட்டிச் சிறையிட்டு
தணலால் அவள் வீட்டை எரித்த சொந்தங்கள்

மனையும், மங்கை செல்வமும் எரிந்து சாம்பலாக
ஊரார் மொழிகள்-விடமாய் வஞ்சியை வாட்ட
உறவு சொல்ல ஒருவன் இல்லையென்றே- எரியும் தணலில்
நடனமாடித் தன்னை எரித்த காதலியோ கண்ணகி

அக்கினி அரங்கில் அவள் நடனம் அரங்கேற
சிறையிருந்த என்னை நினைந்தே-சித்தன்ன பொற்சித்திரம்
தீயில் கருகிட, ஊழிக்கூத்தாய் அவள் ஆடிய பரதம்
என் நெஞ்சோ அவளை எண்ணிப் புலம்பிடும் விரதம்

என் சித்தம், நினைப்புச், செய்கை பித்தானதடி
எரியும் தீயிலும், காதல் தீ கொடிதடி-பேதைக்காய்
இதயம் நாளும் அழும் கார்காலமிது.
வாழ்வில் இருள் சூழ்ந்த கரிநாள் இது

வசந்தமாய் நீயிருக்க நான் மலர்ந்தேன்-பேரொளியாய்
நீ ஒளிர உன்னோடு வழி நடந்தேன்-பரதமாய் நீயிருக்க
பாட்டாய் நான் இசைத்தேன்-இன்றோ கனவாய் நீ கலைய
கல்லாய் ஆனேன், காதலே, நீயின்றி நிலவாய்த் தேய்கின்றேன்.

நாளும், பொழுதும் உன்னையே நினைத்தழும் மனம்
உற்றார் உறவு துறந்து-நாடோடியாய் அலையும் தினம்
செந்நீரை இதயம் சிந்த- கண்ணீரால்
உனக்காய் கவிதை எழுதும் காதல் மனம்

தென்றல் தாலாட்ட, தேன் நிலவு முகம் காட்ட
அலை கடல் பாதங்களைச் சீராட்ட-அன்றில்
கூடிக் குலவும் நிலைகண்டு நாணத்தால் நீ சிவக்க
நான் அணைக்க காதலர் எம்மை மறந்தோம்



புன்புலத்து முல்லையைப்-புன்முறுவலோடு
வள்ளல் பாரியாய் நான் அணைக்க, -என்னில் நீ படர
உன்னில் நான் மலர பூத்த -காதல் இன்பம்
பொய்யாய் கனவாய் போனதே என் பொன்மணி

நாழிகை சிறிது தாமதமானலும், நான் வரும் வழி நோக்கி
பூவிழி சிவக்க வாயிலைப் பார்த்திருப்பாய், கைவளை நெகிழ்ந்து,
கள்ளிருக்கும் கார்குழல் மலர் உதிரப், புன்புல முல்லைக் கொடி
கொழுகொம்பின்றி வாடி நின்றே சோகம் சொல்வாய்

தாமதமாகும் கணமெல்லாம, தவித்தே-நீரோடை
தேடும் கலைமானாய் மனம் துன்புற-கொடு வெயிலே
சீதளம் கொள், அசைவளியே அவர் வரும் பாதை செல்
இறைவனை வேண்டி எனக்காய்த் தவமிருந்தாய்

கார்மலர மலரும் கொன்றைபோல் என் வரவு கண்ட
யாதவியே, என் காதல் பெருநிதியே மலர-பூ முகத்தில்
புன்முறுவலும், பொற்கொடியில் நாணமும் கோலமிட-இன்றோ
நீயல்லா உலகு நிலவில்லா வானானதே என் கண்மணி

நினைந்து வாழ்ந்து நித்தம் சிறுகச் சிறுக இறக்கின்றேன்
உன் நினைவுகளை இதயவீணையில் கலைஞனாய் மீட்டி இரசிக்கின்றேன்
ஒரு நொடியில் உன்னை மறந்து வாழ மதுவோ, நஞ்சோ
-மனங்கவர் காதலியே, மனதாலும் தீண்டான் உன் காதலன்

உன்னை மறந்து ஒரு வாழ்வில்லை-உன்னை இழந்த
மனதில் சாந்தியில்லை-நீயே என் காதல் சன்னிதி
இறைவன் தந்த பெருநிதி, என் காதலின் சங்கநிதி

நினைப்பதற்கு ஆயிரம் நினைவு தந்தாய்-நினைந்தழ
நெஞ்சில் கோடி சோகத்தை சொந்தம் தந்தார்-இன்றோ
என்னை நினைந்தழுது நோகின்றார்-காதல் தீயில்
நான் வேக, சோகத்தீயில் சொந்தங்கள் வேகின்றார்

சித்திரமே என் நெஞ்செழுதிய காவியமே
வானூரும், நிலவும், தேனூறும் மலர்களும் வாழும்வரை,
என் நெஞ்சம் ஒருபோதும் உன்னை மறவாது
நம் காதலும் மடியாது-இது சத்தியம்!

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-25-7-2023*

# அழகைக் காணும் போதெல்லாம்?

---

அழகை காணும்போதெல்லாம் பொங்கும் கடலாய்ப் பூரிக்கும் மனம்
கவிதை நூறு வடிக்கத் துடிக்கும், கண்களும் கண்டு சிலிர்க்க
நெஞ்சத் தவிப்பை இதயத் துடிப்பு உரைக்க, காவியமாய் வடித்து-
வண்ண ஓவியமாய் வரையத் துடிக்கும் இதயம்



படித்துச் சுவைக்க கம்பனின் கவிதை
பார்த்து இரசிக்க-கண்ணனின் ராதை
பாற்கடலில் பிறந்த அழகு
பரந்தாமனின் நெஞ்சில் பூத்த நிலவு

ஓரமாய் அமர்ந்து, ஓயாது அழகை இரசித்து
காவியக் கன்னியை ஓவியமாய் வரைய-வரைந்த
ஓவியத்தை வண்ண ஓவியமும் காண-கயல் விழிகளின்
அனலும், கனி மொழிகளின் தணலும் தகித்ததே

காணாத பேரழகை உங்களில் கண்டேன்
ஓவியமாய் வரைந்தேன்-அழகின் இரசிகன் நான்
அம்மணி கோபம் வேண்டாம் மொழிகளிலோ சீதளம்
பொன்மணி விழிகளிலோ ஆனந்த நர்த்தனம்

கெஞ்சிய மொழிகளால், அஞ்சுகத்தின் கோபம் தணிய
பார்த்து இரசித்த ஓவியத்தை பாவைக்கே பரிசளித்து
நான் மகிழ பூவையின் நெஞ்சில் பூத்த நட்பு
நாள்பட காதலாய் மலர்ந்த பொற்பு

என் கலையரங்கம் வந்தவள்
காட்சிப்படுத்திய ஓவியங்கள் கண்டு வியந்தாள்
கவிதை நயம் கண்டு இரசிகையாய் மலர்ந்தாள்

எழுதாத ஓவியம் ஒன்றிற்காய் விட்ட வெற்றிடம் கண்ணில் பட்டிட,
விழிகள் வினவிட, இதுவரை வரையாத புது ஓவியத்திற்காய்
தவமிருக்கின்றேன், பதில் கேட்டு புன்னகைத்தாள்
பரிசாய்த் வரைய தனையளித்தாள் என் காதலி

கம்பனின் சீதையும் அவளாகி
காளிதாஸன் சாகுந்தலையின் எழிலாகி
காவிரி மாதவியாய் ஆடிய மாது-
தமயந்தியாய் எனக்கு மாலையிட்ட பொழுது

சூடக்கொடுத்த மாலையை, சூடிக்கொடுத்த ஆண்டாளாய்
ஆடிக்களிக்கும் மீராவாய் அழகு குலுங்க
என் நெஞ்சம் கவர்ந்த அழகோ பேரழகி




உயிர் துடிக்க, ஊன் கரைய, மீளாத் துயில் கொண்ட
மும்தாஜை மனம் வரைய-தூக்க மருந்து கொடுத்து
மகாராணி மும்தாஜாய் உறங்கவைத்து
உயிரோவியத்தை வரைந்தேன்

மயக்கம் தெளியக் காத்திருந்தேன்-மீளா உறக்கத்தில்
அவளோ மூழ்கிப்போனாள்-கண்ணீர் பாயக், கரைந்தே
எழுதுகின்றேன்-காதலன் ஷாஜகானின் புண்பட்ட இதயத்தின்
பொல்லாத வலிகளை இதயத்தில் சுமந்த ஓவியன் நான்

கண்டு விழியிழந்தேன், காதலாகி என்னை இழந்தேன்
நெஞ்சில் ஆயிரம் மலர்கள் மலர்ந்து மணம் வீச
காதல் தேன் மழை புதுப்புனலாய் பிரவாகிக்க-அன்பே
உன்னைக் கொன்று உயிரோவியம் வரைந்த மூடன் நான்

கண்மூடி நீயுறங்க-இதயம் கரைய நான் உருக
சோக வெள்ளம் என்னை மூழ்கடிக்க
கன்னியை கொன்று, கவிதையும், ஓவியமும் வடித்த
கலைஞன் நான், கொலைஞன் ஆனேன்

உயிரைப் பறித்து வடித்த ஓவியம் தத்துரூபமாக
உருகி எழுதிய கவிதை காவியமாக
உயிரில் கலந்த காதல், உறங்கும் அழகாக
கவியும், ஓவியனும் ஒன்றான காதலன் நான்

கண்மூடி அவள் தூங்க-அவளருகே நான் உறங்க
எம் காதல் வாழ, நஞ்சே என் நெஞ்சுக்கு நிம்மதியானது.
என் காதலும் கலையாத கனவானது, ஓவியமும்
கவிதையும் சொல்லால் வடித்த தாஜ்மஹாலானது

கலைமேல் கொண்ட காதல் உன்னைக் கொல்ல
காதலன் நானும் உன்னோடு சாக, உன்னைப் பிரிந்து
ஓர் வாழ்வில்லை, உன்னோடு சாவதே எனக்கு மேன்மை
உன்னருகே நான் உறங்க கண்மணி கண்ணுறங்கு
காதலர் மடியலாம், காதல் மடிவதில்லை

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-25-7-2023*

# அழகின் ஆராதனை

---



ஆனிப்பொன்மேனியில் அழகின் ஆயிரம் கோலங்கள்
காணும் விழிகளிலே காதலின் வண்ண ஜாலங்கள்
பூங்குழலில் அடுக்கு மல்லிகைப் பந்தல்
செவ்வாய் பூத்த புன்னகையில் முத்துப்பந்தல்

சங்குக் கழுத்தில் தங்கச்சரங்கள்
செம்மாங்கனிக் கன்னங்களில் நாணத்தின் சுரங்கள்
மாமல்லன் சிற்பமா -மகேந்திரவர்மனின்
சித்தன்ன ஓவியமா இவள்? மயங்கினேன்

மனம் வியக்க, விழி மயங்க, குவளை விழி சிரிக்க
நெற்றிச் சுட்டியும்-நீள் விரல்களும்
கட்டிக்கரும்பை கட்டிக் கொள் என
கண்களால் தூது விட கலங்கி நின்றேன்

சிந்தும் புன்னகையில் முத்துக்கள் சிதற
செவ்வாழைக் கால்களில்- கொலுசு சிந்து பாட
சிற்றிடையில் மேகலை சுருதி கூட்ட
கண்பார்த்த அழகில் நெஞ்சில் பூத்த கவிதை

மண்பார்த்த நாணத்தில் மனம் தையலாள்
மேல் மையல் கொள்ள, வெண்ணிலவோ வானில்
பெண்ணிலவோ மண்ணில் உலாவர
என்னை மறந்தேன் இமைக்க மறந்தேன்.

கைவளை கவிபாட, கார்குழல் ஆடி மலர் தூவ
கொலுசில் கட்டியம், மேகலையில் மோகனம்
கண் பார்த்த முல்லைப் பூவனம், தேராய்-மனதை
ஈயத்தவித்ததே காதல் பாரியின் மனம்.

ஆர்கலி அலையென கார்குழல் அசைந்தாட, குவளைப் பூவிழிகளில்
குறுநகை பூத்தாட, அலரிச் செவிகளில் குண்டலம் ஆட
நுதலில் செந்தூரம் மின்ன, நறுமலர் மொக்கோ நங்கையிவள் நாசி
முக்கனியிலும் இனிய முத்தச் சுவையோ இவள் தரும் ஆசி.

செம்மாங்கனிகள் கனிந்த பொன்மார்பினில் காதல் பூத்தாட
செம்பவள வாயில் முத்துப்புன்னகை கூத்தாட, நறுமணம் கமழும்
நந்தவன மேனியை வண்டுகளும் சுற்றிக் கொண்டாட-கயல்விழிகளில்
அபிநயம் கன்னியின் கிள்ளை மொழிகளில் சந்தக்கவிதையின் இசைநயம்

பங்கய முகத்தில் விழிகளோ குவளை, அங்கயற் கன்னி
குமுத வாயில் அமுதச் சுவை, செண்பக மூக்கில் மூக்குத்தி,
சிந்தும் முல்லை முறுவலில் கொள்ளைபோன மனம்
பெண் அழகோ பூஅழகு கவிதை பாட நாளும் காதலர் தினம்

கண் சுமந்து அழகு சொல்ல, பண் சுமந்து
மனம் கவிதை சொல்ல, பெண் சுமந்த இதயம்
காதல் சொல்ல, காதலில் விழுந்து கவிதை
பாடி இன்புற்ற கவியின் இதயம்

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-25-7-2023

# அழகின் நூதன காவியம்

---



நூலோ இவள்-அழகின் நூதன காவியமோ இவள்?
காமன் மகளோ இவள் காம சூத்திரத்தின் வடிவாய் இவள்
பசும் பாலோ இவள் பார்த்த விழிகளும் இனிக்க மனம்
சுவைக்கும் காமத்துப்பாலாய் பேரழகி இவள்

பொட்டு வைத்த வட்ட நிலவோ இவள்
பூவனமாய் மலர்ந்த காதற் பூங்கொத்தோ இவள்
ஆடை மூடிய அழகு நிலவாய் இவள்
அணைக்கத் துடிக்கும் வெண்முகிலாய் இவன்

விரித்த கூந்தலில் மல்லிகை மணம்
குவிந்த செவ்விதழ்களில் பருகிட இனிக்கும் தேன் குணம்
கண்களோ குவளை வனம், கன்னங்கள் ரோஜாவனம்
மொத்தத்தில் அழகு பூத்தாடும் காமனின் நந்தவனம்

இருக்கும் பாவத்தில் காதலின் நர்த்தனம்
இடையோ மின்னல்-நடையோ நாட்டியம்
காமன் படையாய் இவள், என்னைக் காதலில்
வீழ்த்திய மன்மதன் மலர்கணையாய் இவள்

மதி நுதல் முதல் மங்கலப்பாதம் வரை சந்தனக் காப்பை
மனம் சாத்தி, கண்படும்-நிறை அழகால் காதலாகி
புண்பட்டு, காமன் கணைபட்டு, காதல் தேவதையிடம்
வரம் கேட்டுத் தவமிருக்கும் பக்தனாய் மனம்

கண்டு மனம் போதையில் தள்ளாட
கண்படும் அழகில் கன்னியோ பௌர்ணமி
காதல் வாடை வாட்டிட காளை மனம்
கொட்டுவதோ ஆனந்தக் கும்மி

படிக்கும் பாவத்தில்-என் நெஞ்சம் படபடக்க
துடிக்கும் உள்ளமோ-மனதில் பூவையைச் சிறையெடுக்க
துடியிடையும், எழில் வடிவும் தூக்கத்தை கெடுக்க
கனவிலும், நினைவிலும் வருத்தும் காதற் காமம்

நூல் படிக்கும் அழகை நான் படிக்க, காதல் கவிதை
வடித்து தூது விட்டேன், கன்னி படித்து காதலாகி
என்னைச் சிறையெடுக்க, காதல் தவமிருந்தேன்

கண்ணெதிரே தோன்றி-கலையழகைக் காட்டி
காளை மனதில் காதல் பூச்சூடினாள்
மஞ்சத்து மலரை நெஞ்சத்தில் சூடு
மன்மதனாய் மாறி உந்தன் ரதி என்னைச் சேரு

காமத்துப்பாலை பருகி, வள்ளுவனே வாசுகியைக் காணு
காமசூத்திரம் என்னில் படித்து இன்பம் சுவை, மோகம் கழை
கஜீராகுவின் பாவங்களை காதற் தவநிலைகளை
என்னோடு சேர்ந்தாடு காமம் கடந்து காதலில் நிலை,
காதலே கடவுள் நிலை

இவளின்றி வாழ்வில்லை என்றே மனம் மயங்க, சூடிக் கொடுத்த
ஆண்டாளாய் -அன்பால் தன்னைச் சூடக்கொடுத்த பெண்பால்
என் என்பால் இறை உருவாக்கிய ஏவாள் இவள்தான்
இதயம் துடிக்க, கண்டேன் காதலில் மலர்ந்தேன்.

இவள் காதல் வானில் வளர் பிறையாகி
இவள் நூலகத்தில் ஒரே நூலானேன்
பிறை நுதலில் திலகமாகி
நிறை அழகைத் தழுவத் தென்றல் ஆனேன்

பூந்தேவிக்கு கலிங்கமாகி-பொன்மேனிக்கு வாசச் சந்தனமானேன்
கார்குழலில் மலராகி-கால்களுக்கு கொலுசானேன்
கலையாத அழகின் நெஞ்சுக்குள் காதலன் ஆனேன்
காதல் தேவதைக்கு பக்தனும், தேவனுமானேன்.

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-25-7-2023

# தெய்வத்தாய்-தியாக தீபம்

---

தம்பிராஜாவிற்கு ராணியாய், எம் புவனத்திற்கு
அரசியாய் , நீ என்றோ- தம்பிராசா புவனேஸ்வரி
என்னும் பெயர் கொண்டாய் அம்மா

அதிகாலையில் ஆறு மரைக்கால் சட்டி வைத்து
நித்தம் ஒரு மூடை நெல் அவித்து, சமைத்து
கட்டுச் சோற்றுடன் கணவரை வயலுக்கு வழியனுப்பி
கண் மறையும் வரை வாசலில் உன் காதல் தவம்

பழஞ்சோற்றுக் கஞ்சை பகிர்ந்தளித்து-எம் பசிதணித்தாய்
பட்டினியாய் நீயிருந்து-எம் வாழ்வோ நலமாக
நாளும் இறைவனை வேண்டி- தாயே நீ தவமிருந்தாய்

வெயிலில் காய்ந்து. மழையில் நனைந்து-எமக்காய்
இரவு பகராய் உழைத்த தாயே , எம் தெய்வம் நீயே அம்மா
விரிந்த விசும்பினும், ஏழ்கடலினும் பெரிது உன் தாயன்பு
தாயாய் தெய்வம் தந்த அன்புக் கொடை நீ அம்மா

உன் நெற்றி வியர்வைதான் எம் வெற்றிக்கு காரணம்
உன் பதிபக்தியும், தேவபக்தியும் என்றும், எம்மைக்
காக்கும் சரணாலயம்- இன்று தெய்வமாய் என் நெஞ்சில் நீ
பக்தனாய் உன் பிள்ளை நான் அம்மா

வட்டிக்கு கடன் வாங்கி வளர்த்திட்டாலும்
வறுமை தீண்டாது, வட்டிக்காரன் வாயிலில் நில்லாது
கல்வியே அழியாச் செல்வமடா தம்பி எனக்
கனிவோடு எம்மை ஊட்டி வளர்த்த தெய்வம் நீ

உன் கைப்பக்குவத்தில் இனித்த மரவள்ளிக் கூழ்
சோளங் கஞ்சி, குரக்கன் களி, செல்வமீன் சொதியும்,
குறுநெல் அரிசிச்சோறும் இன்றும் நினைக்கையில்-
நாவும் இனிக்க நெஞ்சம் சுவைக்க, கண்ணீர் துமிக்க-உன்
பிரிவால் தரையில் விழுந்த மீனாய் துடிக்கும் என் இதயம்

தீயாய் நோய் வருத்தியும், வறுமை பாடாய்ப் படுத்தியும்
ஆலாய் நின்று-அரசாய் விரிந்து நிழல் தந்தே எம்மை வளர்த்த
அதிசயம்தான் என்னே ? உன் தியாகமெல்லாம்-இன்று
வரமாய் எம்மை வாழவைக்கும் அற்புதம்தான் என்னே!

கத்தும் கடலும், கருவான் நிலவும் சாட்சியாக
தாயே! ஏம்மை ஈன்ற தெய்வமே
என் சித்தம், நினைப்பு செய்கை உள்ளவரை
என் உள்ளம்  உன்னை ஒரு போதும் மறவாது

பிறவாமை வேண்டும்-தாயே
மீண்டும் பிறப்புண்டேல்
இனி வரும் பிறவியெல்லாம்-தாயே
நின்னை மறவாமை வேண்டும்

தாயாய் உன்னைப் பெற தவம் நான் செய்யவில்லை-அம்மா
நான் நூற்காத தவத்திற்கும்-வேண்டாத ஜெபத்திற்கும்
இறை தந்த பெரும் கொடை நீ அம்மா

அம்மா உன்னை நாம் புதைக்கவில்லை
நாளெல்லாம் உம்மை துதிக்க
எம் நெஞ்சில் விதைத்தோம் தாயே
நிம்மதியாயத் தூங்கு

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-26-7-2023

# அம்மாவின் பிள்ளை

---

அம்மாவின் தொடுகை மட்டும் அறிந்த குழந்தை
அம்மா என்று சொல்லத் தெரியாத மழலை
மகனை மட்டும் மறவாத தாய்மை
கொரோனாவுக்கு பலியாகும் அவல நிலைமை




கனியுதிரும், காவோலை உதிரும், காய் உதிருமோ?
இளந்தாயும் உதிர்வதா? கனிமரம் உதிர்ந்தால்
வேர் சிந்தும் கண்ணீர் யாருக்கும் தெரியும்?
பிஞ்சுகளின் வேதனை இறைவனுக்குப் புரியும்?

பெற்ற மகனை-பெருநிதியாய்க் காத்த அன்னை உயிரை
கொரோனா மெல்லக் கொல்லக், கண்டு களித்த விழிகளும்
தொட்டணைத்த மார்பும்-கரங்களும் -கடைசியாய் மகனை
ஒரு முறை கட்டியணைக்கத் துடிக்க கண்களில் கசியும் கண்ணீர்

துடித்து களித்த இதயம்-தன் கடைசித் துடிப்பை இசைக்க
சுருங்கி விரிந்த சுவாசமும் இறுதி மூச்சை
வைப்பதா, விடுவதா புரியாமல் தவிக்க
அன்னையின் விருப்பத்தை ஏற்ற இத்தாலிய அரசு

கவசமாய் மூடிய தாய் மார்பில்
சுவாசமாய் குழந்தை ஒட்டிட
ஒரு முறை துடித்து களித்த இதயம்
சுருங்கி விரிந்த சுவாசம்.

கட்டியணைத்த அன்புக்கரங்களும் வெட்டிய விழுதாய் தளர்ந்திட
கண்டு மகிழ்ந்த தாய் விழிகளும் களிப்பில் மெல்ல உறங்கிட
கண்ணே போய் வருகின்றேன் இதயம் உருகி விடைபெற
கண்டவர் விழிகளையும் ஈரமாக்கிய தாயன்போ பேரின்ப உறவு

ஏற்றிய மெழுகும் முற்றாய் எரியுமுன் பாதியில் அணைந்திட
பற்றிய கரங்களுக்குள் பாலகனும் அமைதியாய் உறங்கிட
தன்னுயிரை தவமாக்கி மகன் உயிரை வரமாக்கிட
இறைவனிடம் வரம் வேண்டி வானகம் போன தாய்மை

அணையும் பொழுதிலும் அன்பை அள்ளி வழங்கிய தெய்வம்
அணைத்த பொழுதிலும் மகனை காத்திட-மனதில்
ஆண்டவனை வேண்டிய அம்மை-இறுதி மூச்சிலும்-என்
இன்பம் நீ என மகனிடம் அணைப்பால் சொல்லிய தாய்மை

அன்னையின் உயிர் விண்ணுயரப் பார்த்தவர்
விழிகள் கண்ணீர் சொரிய, தன்னுயிர் போகும்
நிலையில் தனயனைக் காக்க
உணர்வால் சொல்லிய தாய்மையின் கீதை

**வாழும் போதும், சாகும் போதும்**
**வாழ்நாள் எல்லாம்**
**பிள்ளைகளுக்கு வரமாகும் அன்னை**
**தாயே தெய்வம் என்ற உண்மை**

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-26-7-2023

# என் பிரியமானவனுக்கு

---

இறைவன் தந்த இன்பக் கொடை-நண்பா நீ
ஆண்டுகள் பல கழித்தும் இளமை மாறாத
இதயம் ஒழுகிடும் கற்பாய் நம் நட்பு.
சுருதி பிசகாத அபூர்வ ராகமாய் நம் உறவு

கல்லூரியில் தொடங்கிய வாழ்வுக் கலையான நட்பு
காலம் செல்ல வெவ்வேறு பாதைகளில் நம் வாழ்வு
குன்றாத சுவையோடு இன்றும் இனித்திட-கைகோர்த்து
நடைபோடும் காலத்தால் அழியாத நம் உறவு

உள்ளம் மறவாத நட்பு உயிரோடு கலந்த உறவாகித் தழைக்க
வானாய் நிலைக்க ஆண்டுகள் ஐம்பது கடந்தும்
இளமை மாறால் இனிக்க -நூற்காத தவத்திற்கு
இறைவன் தந்த அரிய வரமாய் உன் உறவு

இனியவனே உன் அன்பு முகமும் அழகிய நட்பும்-இன்றும்
என் நெஞ்சுக்குள் தேனாய் இனிக்க- இதயத்தில் நிலாவாய் உலவ
மாறாத உன் புன்னகையும் மாசில்லா உன் மனைவியின் நேசமும்
நெஞ்சை நெகிழவைக்க, விழிகளில் துமிக்கும் ஆனந்தக் கண்ணீர்

நலமோடும் வளமோடும் பல்லாண்டு வாழ-
எல்லாம் வல்ல இறைவனை வேண்டி
உன் பிறந்த நாள் இன்று
மனம் மகிழ்ந்து பரவசத்தோடு வாழ்த்தும்
உன் நண்பன்.

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-26-7-2023

*6th March 2020.*

# அந்த நாள்

அந்த நாள் ஞாபகம் நெஞ்சிலே வந்ததே நண்பனே
இந்த நாள் அன்றுபோல் இன்பமாய் இல்லையே
அது ஏன் ஏன் நண்பனே? நண்பனே?

அன்பு மழையின்றி நட்பெனும் நந்தவனம் வாட
உண்டு சுவைத்த மலர்த்தேனை எண்ணி மனம் புலம்ப,
ஒரு மாலைக்குள் உதிரும் மலரோ? வண்ணமும்,
வாசமுமில்லாக் காகிதப்பூவோ நம் உறவு?

புரிந்துணர்வின்றி நம் உறவும் பிரிந்திடுமோ?
ஆணவப் புயலில் வேரோடு சாயும் விருட்சமாய் மாறிடுமோ?
புதியன வந்திடப் பழையன கழிந்திடும் உறவோ?
நட்பும் கற்பில்லா விபச்சார உறவோ?

நேற்றைய எண்ணங்கள் நெஞ்சில் இனிக்க
இன்றைய நிலைமை நெஞ்சைத் தீயாய் எரிக்க
நம்மிடையே நீண்ட மௌனம் நிலைக்க
உறவுகள் சிறுகதைதான் போலும்

*“A crowded room is an emplace without you.”*
*“You are the enchanted dawn of my heart”*

காகித உறையின் மேலே எழுதிக் கடிதங்கள்
பரிமாறி கழித்த காலம் கனவானதே!
என் கவிதைகளைப் பாராட்டி எழுது எழுது என
ஊக்குவித்த நட்பூ -குப்பைகளுக்கு விமர்சனம் ஏனோ?
மௌனமும் விமர்சனம்தானோ? பதிலானதோ?

உலகில் மிகச் சிறந்த நண்பன்-விருதளித்து
கௌரவித்தாய் -இன்றோ நம் உறவு விரிசல் கண்டிட
மௌனத்தவம் பூண்டாய்?

ஏதும் நிரந்தரமில்லாத இவ்வுலகில் எல்லாம் மாறும்
நம் நட்பும் ஓர் நாள் மீண்டும் தளைக்கும்
அன்பினால் இன்புற்ற நட்பும் அன்பின்றிக் காய
நட்பிட்கும் அமாவாசையோ நண்பா, சொல்?

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-26-7-2023

# அருட்பா

---



ஆழ்வார்களும், நாயன்மார்களும், ஆண்டாளும்
இறைபுகழ் பாடிய இன்ப உலகில்-சிறுதொண்டன்
என்னையும் தாலாட்டிச், சீராட்டி, தமிழால் உயிரூட்டி-
தன்னைப் பாட வரம் தந்த அன்புத் தந்தை என் இறைவன

வெண்மேகமாய் அலைந்து களித்து-கார்மேகமாய்க்
கறுத்து, திரண்டு மழையாய் கரைந்து-நதியாய்
பெருக்கெடுத்து கடலைச்சேரும் பெரும் பேறு-வந்தவிடமும்,
போகும் இடமும் ஒன்றான பேறாய் வாழ்வு

கானக் குயிலின் கச்சேரி-கலாப மயிலின் நடனம்,
புள்ளினத்தின் பூபாளம், பூக்களின் மலர்க்கோலம்
இறைவனைப் போற்ற, அவனோ மா கலைஞன்
தில்லையில் ஆடும் கூத்தன்

முத்தமிழை கற்றுத் தந்த முதல்வனும் அவனே
முக்காலம் கடந்த மெய்பொருளும் அவனே
அவனையன்றி எவரை பாடுவேன் என் நண்பா?

கல்தோன்றி, மண்தோன்றாக் காலத்தே
முன்தோன்றிய மூத்தகுடிக்கு முத்தமிழை மொழியாக்கி
முத்தமிழ் புலமை சுவைக்க-புலவன் நக்கீரனோடு
தமிழால் விளையாடிய இறையனார் ஈசனே

கம்பனும், பெருமான் வள்ளுவனும், இளங்கோவும்,
பாரதியும், கண்ணதாஸனும் பாடிய இன்பத்தமிழ்போல்
இன்னோர் மொழி ஏதும் உலகில் உண்டோ?

இனிது இனிது கன்னியர் இதழ்சுவை இனிதே-ஆயினும்
உயிர் மெய் சிலிர்க்க உள்ளமும் நாவும் சுவைக்க
அமுதிலும் இனிதாய் இனிப்பது கன்னித்தமிழே
நூற்காத தவத்திற்கு இறை ஈந்த வரமே என் தமிழ்

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-26-7-2023*

# அசோகர் தேடிய அமைதி

வல்லரசுக் கனவு கண்ட மாமன்னன்
கலிங்கப்போரில் கற்ற பாடத்தால்
கல்மனம் கனிந்திடப் பௌத்தரானார்
நல்லரசு அமைத்தே நாடான்றார் அசோகர்

வெள்ளரசுக் கிளையோடு-பெருமான் புத்தரின் நற்செய்தியை
உலகெங்கும் பரப்பி அமைதியின் தூதரானார்-
பிள்ளைகள் மகிந்த, சங்கமித்திரை பிக்குவாக்கி
வரலாற்றில் ஒப்பற்ற மாமன்னரானார்.

இன்றோ-வல்லரசுகள், வறிய நாடுகளின் வளங்களைச் சூறையாட
ஆயுதம் வழங்கி உள்நாட்டுப் போர்களைத் தூண்டிடும் அவலங்கள்
சர்வதிகாரிகளை அரியணை அமர்த்தி, நாட்டைச் சீரழிக்கும் யுத்தம்
கண்ணீர் ஆற்றில் கலந்தோடும் ஏழைகளின் இரத்தங்கள்

வல்லரசுகள் அழித்த வியட்நாம்,
யெமன், சோமாலியா ஆப்கான், லிபியா.
ஈராக், சிரியா, டிகிரே சூடான்,தென் சூடான்
என நீளும் நாடுகளின் பட்டியல்கள்

ஊரழிந்து, உயிரழிந்து உடைமைகளும் அழிந்து
நாடழிந்து அகதிகளான மானுடம்-ஆழ்கடல் தாண்டி
ஐரோப்பாவில் தஞ்சம் கோரிடும் அவலங்கள்

கொரோனா கொன்றழிக்க தடுப்பூசிக்கோ,-முகக்கவசத்திற்கோ,
சவர்க்காரத்திற்கோ வழியின்றி- அகதி முகாம்களில் மானுடம்
கொத்துக் கொத்தாய் மடிந்திட-ஆயுத விற்பனையால், கோடிகளை
குவித்திடும் வல்லரசுகள், கோவிட்டிலும் கொடிய வைரஸீக்கள்

அண்டவெளி உல்லாசப் பயணத்திற்கு
பல்லாயிரம் கோடிகளை கொட்டி ஆய்வுகள்,
வெற்றிக்களிப்பை கொண்டாடிட
கோடிகளில் “ஷம்பெயின் கேளிக்கைகள்”

உறங்கிடக் கூரையும், ஒருவேளை உணவும் கிடைத்தால்
அதுவே சொர்க்கம் எனக் கனாக் காணும் இலாசர்களை
கண்ணெடுத்துப் பாராத கயவர்-கோடி ஈஸ்வரர்கள் -முப்பது
வெள்ளிக்கு இன்றும் இயேசுவைக் காட்டிக்கொடுக்கும் சீடர்கள்

யுத்த மேகங்கள் நாளும் வானில் கர்ச்சிக்க
சிறுவரைக் கடத்தி யுத்தங்கள் நடத்தி
மொட்டுக்களைப் பறித்து-காலனுக்கு சூடி
மோகவலைக்குள் சிக்காத சிட்டுக்களின் சிறகொடித்து-
காமத்தீக்கு சாமரம் வீசி, கண்ணீரில் முகம் கழுவி
செந்நீரில் விடாய் தணிக்கும் யுத்தவெறியர்கள்

இறைவன் நம் தந்தை, நீங்கள் என் சகோதரர்
அன்பினால் மானுடத்தைப் புடமிட்ட
அகக்கிளாச்சியாளரை
*“மதத்தில் அடக்கி” “அப்பத்துள் ஒடுக்கி*
மண்டியிடத்தூண்டும் மாச்சரிய மதவாதம்

ரோம் நகர வீதிகளில் ஊர்வலமாய் எடுத்து வந்தும்
அஞ்சாத கெரோனா, அஞ்சாது சொல்லியதோ-
ஆட்டுத்தோல் போர்த்திய ஓநாய்கள் எல்லாம்
போலி இறைவாக்கினர் என்று?

சீன ரஷ்ய கூட்டணி ஒரு புறம்
அமெரிக்கா -நேட்டோ கூட்டணி மறுபுறம்
உலகின் வளங்களைச் சுரண்டிட-
கொள்ளைபோகும் உலக வளங்கள்

அமேசன் காடளித்து, அனுவாயுதக் கழிவுகளை கொட்டி
அலை பாயும் நீலக்கடலை அழித்தார்,
சஹாரா பாலை நிலமழித்தார்-பச்சை வாயுக்களால்
ஓஸோன் மண்டலத்தை சிதைத்தார்

புவி வெப்பமடைய- காட்டுத் தீயும்
பெரு வெள்ளமும், நோய்களும் பெருகிட
மானுடமழிய-வளங்களைச் சுரண்டும்
வல்லரசெல்லாம் கொடிய அரக்கர்களே?

ஆய்வு கூட வைரஸோ? வல்லரசுக்களின்
உயிரியல் ஆயுதமோ கொரோனா?
ஏழைக் குடிமக்கள்-இவர்களுக்கு
ஆய்வுகூட வெள்ளெலிகளோ?

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-26-7-2023

# அவள் தந்த காதல்

---

கள்ளிருக்கும் மலர் விழிகளால் -பூ நெஞ்சை அள்ளி தந்து
காதல் சொன்னாள், கவிதையாய் மொழி மாற-நெஞ்சில்
கானக்குயில் பாட , கலாபமயில் தோகை விரித்தாட
வாழ்வைப் புது வசந்தமாய் மாற்றிய காதல் பெண்ணாள்

பனிமழையில் நீராடிப், பூ மழையில் இதயம் நடைபோட
கான மழையாய் அவள் சிரிப்பு -காதல் மழையில் என் களிப்பு-
அலைபாயும் காதல் கடலாய் அவள் இருப்பு-காதல்
வானில் உலாவரும் பௌர்ணமியாய் அவள் ஜொலிப்பு

ஆலாய்க் கிளை விரித்து, அழகாய் விழுது விட்ட காதல்
அவலமாய் விழுந்திட-வேர்பிடித்த இதயம்
விம்மி கண்ணீரில் சோர்ந்திருக்க-இன்று
ஒற்றை குயிலாய் கூவும் உடைந்த என் இதயம்.

காதலின் வலி கானக்குயிலுக்கும் தெரிய
கடலின் இருப்பு தேடும் நதிக்கும் தெரிய
துடிக்கும் இதயத்தை துடியிடையாள் மறந்தாள்
தேறுதலாய் ஒரு வார்த்தை சொல்ல மறந்தாள்

கண்ணுக்குள் விரிந்த காதல்-கண்களுக்குள் புதைய
பூவனமாய் மணந்த நெஞ்சம் புதைகுழியாய் நாற
கன்னியருக்கு காதலும் பொழுதுபோக்குதானோ?
மலர்களும், காகிதப்பூக்களும் ஒன்றோ?

பார்த்த இரசித்த அழகை பாயும் விழி நீர் கரைக்க
வார்த்தை கோர்த்த கவிதையை சோகம் சிதைக்க
பழகிக் களித்த உறவும்- பழங்கதையோ? பாடித்திரிந்த
காதல் கிளியும் பிரிந்து போக காதலும் வெறும் கனவோ?

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-26-7-2023

# அவளுக்கென்று ஓர் மனம்

---

இரைப்பையின் பசிதீர்க்க கருப்பையை அடகு வைத்தாள்
கடத்தப்பட்ட கன்னி, காமப் பசியாறிய காமுகன்
இரைப்பையை நிரப்பாமல் -இந்திரியத்தால்
கருப்பையை நிரப்பி , கண் மறைந்தான்

கற்பு பத்திரம் பாலியல் தொழிலாளிக்கு என்றே
கட்டாயக் கருக்கலைப்பு செய்வித்தான்
கடத்தி சிறை வைத்த கொடிய அரக்கன்- காமுகருக்கு
விருந்து படைத்து பொருள் ஈட்டும் கயவன்

மலரும், கதிரும் மலர்ந்து சொல்லியும், மங்கைக்கு
விடியலில்லை. மலர்மேனி கசங்கி , மஞ்சம் கலைந்திட
காமப் பசி தீர்க்கும் அட்சய பாத்திரம்
அன்பால் நிறைந்திட வரமில்லை

தொடரும் காமப் பந்திகளுக்கு
தொடர்ந்து தன்னை விருந்தாய்ப் பரிமாறி
செல் விருந்து முடிய-வருவிருந்து நோக்கும்
அபலையின் வாழ்வோ எரிநரகு

செல்வர் கொண்டாட காமன் பண்டிகையிவள்
துச்சாதனன் இன்றி நாளும் துகிலுரியும் பாஞ்சாலியுமிவள்
காமச் சங்கொலிக்க காலமில்லை இதயவீணையில்
முகாரி ஒலிக்க, அனலில் விழுந்த மெழுகாய் பாவை

பாலியல் பாஞ்சாலிக்கு கண்ணனும் துணை வரவில்லை
கவர்ச்சிக் கொடியாய்-முல்லையும் மாறிட
தேரீந்த பாரி வள்ளல்களுக்கும் குறைவில்லை
இந்திர, சந்திர தேவர்களுக்கும் குறைவில்லை.
காமமே யாதுமான மாயநிலை

பெண்மையின் தனியுரிமைக் கற்பை-பேடிகள்
விபச்சாரமாக்குவது பெண்மைக்கு இழைக்கும் பெரும் கொடுமை
கூண்டுக்களியாய் -கொஞ்சும் கிளியின் வாழ்வு மாறிட
சிறகு விரித்து வானில் பறக்க இறக்கை ஒடிந்த வண்ணக்கிளிக்கு
சிறகு வளர்க்கச் சுதந்திரமில்லை

கடத்தப்பட்டு நாடு கடந்து, பாலியல் தொழிலாளியான
கன்னியர் எண்ணிக்கையோ பல இலட்சம்-மனித உரிமை
அமைப்புக்கள் போராடியும் மங்கையர் துயர் நீங்கவில்லை
அரசுகளும் அண்ணகனான அவலநிலை.

மாபியாக் கும்பலுக்கு இளமையும், அழகும் உள்ளவரை
மங்கை கட்டிக்கரும்பு- நோயும், முதுமையும் கொல்ல
மூப்படைந்த அழகியும் சப்பித் துப்பிய சக்கை கரும்பு

சொர்க்கம் என்று இவளுக்கு ஏதுமில்லை
நரகத்திலே நாளும் வாழ்கை
மீட்பராய் யாருமில்லை-கடவுளரும்
சாமிகளும் காமுகரான அவல நிலை

என்று தணியும் பாலியல் கொடுமை-ஆண்களே
என்று மாறும் உங்கள் இழி நிலை பேடிகளே
பெண்மையை சம்போகமாய் கண்டவன் காமுகன்
பெண்மையில் தாயைக் கண்டவன் தேவமைந்தன்

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra-26-7-2023*

# ஆயிரம் நிலவுகள்

---

திங்கள் காணாத வானாய் நெஞ்சம் துடிக்க
செவ்வாய் இதழ் சுவையின்றி இதயம் தவிக்க
புதன் வந்தது, புள்ளி மான் வரவில்லை-

வியாழன் போனது,வெள்ளி நிலா வருவாள் எனக்காத்திருந்தேன்
சனியும் வரவில்லை-ஞாயிறு காதலுக்கும் ஓய்வென்று
யார் சொன்னார் இவளுக்கின்று?

பார்கத் திகட்டாத கன்னங்களோ கனிந்த கிண்ணம் பழங்கள்
முல்லைச் சிரிப்போ ஒளிரும் முத்துச்சரம்-கானக் குயிலோ
இவள் மொழியில் ஆடும் மயிலும் இவள் நடையில்
கண்டு மகிழ்ந்த நிலவு, நெஞ்சில் மலர்ந்த காதல் உறவு ,

கண்களால் என்னைக் கொய்து கார்குழலில் காதல் மலராய் சூடியவள்
பூங்கரங்களால் என்னை அள்ளி, பொன்மார்பில் மாலையாக்கியவள
என் நெஞ்சம் நிறைய காதலை அள்ளித் தந்த கங்கை
பொன் மடியில் எனைப்போட்டு கொஞ்சும் காதல் மங்கை எங்கே?

வான் நிலவும், செந்தேன் மலரும் அவளைச் சொல்ல
பூந்தேன் அருந்த காதல் விருந்தை தேடி கண்களும்
அழுது கண்ணீர் சிந்தக், காணாத காதல் நெஞ்சம் தேடி
ஒற்றைக் குயிலாய் கரையுதே

சோக கங்கை என் நெஞ்சுக்குள் பொங்க
விழிகளும் கண்ணீர் மாலை தொடுக்க-விம்மும்
நெஞ்சும் எரி மலையாய் கொதிக்க-எங்கே அவள்
தேடித் தவித்து, தேவதாஸாய் துடிக்கும் என் மனம்

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-26-7-2023

# பாமதி–பிரம்ம சூத்திரம்

---

முற்றிப்பழுத்த கனி-இன்றோ, நாளையோ உதிரக் காத்திருக்க-
பௌர்ணமியும் அமாவாசை நோக்கி மெல்ல நகர்ந்திருக்க
மூப்பும், பிணியும் மெய்வருத்த-அன்பு மகனைக் கண்ணோக்கி
எனக்குப்பின் என் மகனிற்கு யார் துணை?
அநாதையோ என் அன்புச் செல்வன்? கலங்கிய தந்தை





நூல் ஆய்வில் தன்னை மறந்து பிரம்ம சூத்திரத்திற்கு
உரையெழுதும் அவன் கனவு, இரவும் பகலும்,
இரு புறமும்- எரியும் மெழுகாய் அயராத அவன் உழைப்பு
இறை வரமாய் ஏற்ற தேவ அழைப்பு

பெருமிதம் கொண்ட தந்தை-வாஞ்சையோடு கூறினார்
மகனே திருமணம் செய்து கொள், தாயில்லை உனக்கு,
தாரமே இனித்துணை என் முடிவுகாலம் நெருங்கிவிட்டது
உன் மண நாளை காண்பதே என் மனதிற்கு நிம்மதி

தந்தை சொல் மிக்க மந்திரமில்லை - தனயனும்
பணிவோடு சம்மதிக்க , மந்திரம் முழங்கி, மணமாலை சூட
சுற்றமும், சொந்தமும் மகிழ்ந்து வாழ்த்த-கைத்தலம் பற்றி
கோலமயிலாய் வலது காலெடுத்து வந்த மங்கை பாமதி



விருகஸ்பதி வானிலோ காதல் மதி-
பாமதி வாழ்விலோ பாயும் காதல் நதி
ஆனந்த கண்ணீர் சொரிய
அகமகிழ்ந்த தந்தையோ தேயும் மதி

அஞ்சணவிழிகளில் ஆயிரம் கனவுகள் பூத்துச்சொரிய
ஆடும் பூஞ்சடையும் கலாபமயிலாய் தோகை விரிக்க
சின்னப் பிறைநுதலில் சிரிக்கும் குங்குமம்
வண்ணக் குமுத வாயில் வற்றாத அமுதச்சுவை மங்கலம்

நாணிய கொடியிடையில் மேகலை சினுங்க-அன்ன
நடையில் கொலுசொலி ஆனந்தக் கட்டியம் சொல்ல
கைவளை தாளமாகி , கானகுயில் பாடலாகி
இசை விழா தொடங்க, இருண்ட வீட்டில் புதிய பௌர்ணமி
விருகஸ்பதியின் வானிலே காதல் நிலவாய்ப் பாமதி

பிரம்ம சூத்திரத்தில் மூழ்கியவனோ, காமசூத்திரம் படிக்க மறந்தான்
வானிலே வெண்ணிலா காய மஞ்சத்தில் தேன்நிலாவும் தனித்தே காய
கூறை கசங்காமல், குங்குமம் கலையாமல், கார்குழலும், மலர்ச்சரமும் குலையாமல்
பஞ்சணையும் நோகாமல் முதலிரவு காணாமல் தனியே காய்ந்த முழுநிலவு



தந்தையால் தனயனின் தவம் அறிந்த உத்தமி
மணாளன் கனவு பலிக்க, கொண்டவனுக்கு சேவகியாகி
தவமாய் தனியே காய்ந்த பௌர்ணமி

தந்தையும் பிடி சாம்பலாகி
கங்கையில் கரைந்து கடலில் சங்கமித்திட
கணவனும் மனைவியும் சங்கமிக்காமல்
கழிந்த தாம்பத்ய உறவு-

வீணையும், கலைஞனும் அருகிருந்தும் மோகனம் ஒலிக்கவில்லை
மலரும், வண்டும் அருகிருந்தும் ஆனந்த ரீங்காரம் கேட்கவில்லை
கனியும், கிளியும் ஒன்றாயிருந்தும் காமனுக்கு விருந்து படைக்கவில்லை
பூத்த முழுநிலவைப் பார்த்து இரசிக்க-காமசூத்திரத்திற்கு
பிரம்ம சூத்திரம் தடையான சூழ்நிலை




சுவடிகளில் மூழ்கியவனுக்கு சுந்தரி தென்படவில்லை
அறுசுவை அன்னமிடும் போதும்-விளக்கு
அணையாமல் நெய் வார்க்கும்போதும் பூக்கரங்களைக்
கண்டும் காதல் பொங்கிப் பூரிக்கவில்லை

புது மலரின் முகம் பார்த்து தேன் அருந்த வரமின்றி
ஒளிரும் நெய்விளக்கு தேன்நிலவை மறைத்திட
காதலின்றி தனியே காயும் முழு நிலவாய் பாமதி
கவிதையின்றி சுவடிகள் மேயும் பண்டித விருகஸ்பதி

சிறகடித்துப் பறந்த காதல் கிளி கூண்டுக் கிளியானது
பாடிக் களித்த கானக்குயில் ஊமையானது
ஆடிக்களித்த கலாபமயில் ஆட்டம் மறந்தே-கணவன்
யாக்கும் வேள்வியில் தன்னை ஆகுதியாக்கியது

நிலவு மலர்ந்த பௌர்ணமி இரவில் நூல் முற்றுப்பெற-
அணையும் சுடருக்கு அம்மை நெய் வார்த்து உயிர் கொடுக்க,
அண்ணல் கண்ட அன்புக் கரங்கள், அம்மணி யார் நீங்கள்?
அறியத் துடித்த வினாவில் அன்பின் நெகிழ்ச்சி, நன்றி உணர்ச்சி

அமுதுண்ணும்போதும், அணையாமல்
சுடருக்கு நெய் வார்க்கும் போதும்
உங்கள் கரங்களை காண்கிறேன்-என்னை
மறந்தவன் நான் உங்களையும் மறந்தேன்?

கார்குழலில் வெள்ளி நரைகள் மின்னிட, மதி நுதலில்
மணாளன் நீடுழி வாழத்தரித்த குங்குமம் புன்னகை புரிந்திட,
ஞாயிறு கண்ட செந்தாமரையாய் மலர்ந்தவள்-நெய்விளக்காய்
தன்னை எரித்த குடும்பவிளக்கு செவ்விதழ் திறந்து செப்பினாள்
உங்கள் கைத்தலம் பற்றிய பத்தினி பாமதி நான்

இத்தனை காலம் தவமிருந்தேன்-தங்கள் ஒரு மொழிக்காய்
இன்றோ என் தவம் பலித்தது, வரம் கிடைத்தது,-
தங்கள் பணி முடிந்தது, இனி நீங்கள் சந்நியாசம் ஏற்கலாம்



ஏற்ற தன் சபதத்தை ஏந்திழையாள் கூற
மனமோ சுக்கு நூறாய் வெடித்து சிதறிட
நீர் பூத்த விழிகள் நிகழ்ந்த அநீதிக்காய்
குலுங்கி அழுதது, மன்னிப்புக் கோரியது

தாரமாய் வந்து, தாயாய் என்னைப் பராமரித்த அம்மையே
இல்லறம் ஏற்க இளமை கழிந்து விட்டது-நரையும், திரையும்
வந்துவிட்டது, பணி முடிந்தவுடன் துறவு பூணுவேன்-என்ற
சபதம் பொய்க்காமல் என்னைக் காத்த தெய்வம் நீங்கள்

அபூர்வ பெண்மணி நீங்கள் அரும்பணி தங்களது
நான் பட்ட கடன் தாயே அளப்பெரிது-என் நூலை
உங்களுக்கே உவகையோடு அர்ப்பணிக்கின்றேன்
நான் எழுதிய உரை "பாமதி" என்றே அழைக்கப்படும்.

நன்றிப்பெருக்கால் நா தடுமாற-ஈரவிழிகளோடு
விருகஸ்பதி தன் சுவடிகளை மூடினார்
இல்லறமும் துறவறமாய் மாறிய வாழ்வில்
யார் தபசி ? யார் சந்நியாசி?

காதல் நிலவாய் வந்த பௌர்ணமி
சந்தனமாய் தன்னைத் தேய்த்த வான்மதி
அகிலாய் தன்னை எரித்த திருமதி
நெஞ்சம் விம்மிட புன்னகைத்த பாமதி

பின் தூங்கி முன் எழுந்த மங்கை-பிள்ளையென்று
கணவனைத் தாலாட்டிய அம்மை-சூடிய மலர் வாடியும்
நெஞ்சம் வாடாத நங்கை, கங்கை காய்ந்தும்-நெஞ்சில்
காதல் வெள்ளம் வற்றாத அபூர்வ கங்கை



கணவனுக்கு நிழலாகி- தனியாய்க் காய்ந்தவள்
கண்ணை இமை காப்பதுபோல் கணவனைக் காத்தவள்
ஐம்புலனையும் அளவில்லா காதலால் வென்று
தவம் புரிந்த பெண்மை காதலின் மேன்மை

சூடிய மலர்களும், குங்குமமும், கூறையும்
பஞ்சணையிலும் கலையாமல், கசங்காமல்
தன்னை சூடக்கொடுத்தவள்-இன்றும்
வாடாத மணமாலை, தேயாத பௌர்ணமி

கட்டியவனை துறக்கும் நேரம் வந்தும், முகம் மலர்ந்து
புன்னகை பூக்க விடை சொன்ன பெருந்தேவி
முப்பெருந்தேவிகளிலும் பேரழகி

பூமியைப் பாதங்கள் முத்தமிட, சந்தமிடுமோ கொலுசு
ஆடிடும் நர்த்தனத்தில் சத்தமிடுமோ கைவளையல்
கணவனுக்கு இடைஞ்சலாகும் என்றே அணி துறந்த
அபூர்வ நங்கை, காதலின் அதிசய கங்கை



அன்ன நடையிலும், செவ்வாய் மொழியிலும் மௌனத் தவம் யாத்து
கணவன் யாக்கும் பிரம்ம சூத்திர வேள்வியில்-தன்னை
ஆகுதியாக்கிய பெண்மை, ஆபூர்வ ராகமான உண்மை

அத்வைதமா? துவைதமா?விசிட்டா துவைதமா பிரம்மம்?
காணாத விடைக்கு விடை தேடி இளமையைத் தொலைத்தவர்
இல்லறமே மேலான அறம் -சிவசக்தியாய் பிரம்மம்
சிவத்தோடு ஒன்றான பாமதியை அறியாத விருகஸ்பதி

ஈருடலும் ஒருயிருமாகி நின்ற உமையை
உமையொருபாகனின் வதியை-வாழ்த்தி
வணங்கி விடைபெற்றார் விருகஸ்பதி

மணவாழ்வின் மங்கலப்பயணத்தில்- மெய்
இன்பம் துறந்து பதியே கதி என வாழ்ந்த பாமதி
காவி தரிக்காத சந்நியாசினி-இன்றோ
காவி தரித்து காசி போகும் விருகஸ்பதி



பிரம்ம சூத்திர உரையும் முற்றுப்பெற-மங்கல
சூத்திரம் தந்த மணவாழ்வும் சுபமாய் நிறைவுக்குவர
மணாளன் கனவும் நனவாக-நீர் பூத்த நெடுவிழி மறைத்து
காதல் நெஞ்சின் துடிப்பை மறுத்து
மங்களமாய் மணாளன் பாதம் பணிந்து
துணைவன் பூண்ட துறவு வாழ- காதலை துறந்த
பாமதியே மெய்த்துறவி-மகாதேவி

**"இயற்கையும், இறைமையும் சங்கமிக்க**
**சந்நியாசியாய் வாழுங்கள்" என் கடன் முடிந்தது.**
விழிப்புணர்வே சந்நியசம்-புரிந்தவர்க்கு
காவி வெறும் வேஷம்

மெய்யின்பம் கடந்த பேரின்ப உறவானது இல்லறம்,
தூய காதலின் சின்னமாய் "பாமதி" இன்றும் வாழ்ந்திட
இல்லறத்தில் இருமனம் பூண்ட துறவு, உயிர் மெய் கடந்த உறவாகி
உண்மைக் காதல், யாத்த வேள்வியில் ஆகுதியானது

கல்லாய் கிடந்த அகலிகையை தொட்ட-ஶ்ரீராமன்
கால்களுக்கும் அவள் காதல் இதயம் புரியவில்லை
சொல்லாய் கிடந்த பிரம்சூத்திரத்தில்-சொல்லாத
பாமதியின் காதல் படித்தவருக்கும் தெரியவில்லை?

அறிவால் பிரம்மத்தை அறியத் துடித்த விருகஸ்பதியோ
மேதாவி, அனுபூதியில் அனைத்தும் பிரம்மம்
அறிந்த பெண்மை, கணவனுக்கே வாழ்வைத் தவமாக்கி
இல்லறத்தை நல்லறமாக்கிய அதிசயப் பெண்மை



அணையும் சுடருக்கு நெய் வார்த்த பெண்மை
அணையாக் காதலை நெஞ்சில் சுமந்த மேன்மை
கணவனே கண் கண்ட தெய்வம்-பணி வாழ்வோ
மேலான தவம் என்று வாழ்ந்த அம்மை

பாமரன் யான் பாடுகின்றேன்
இதைப்போல் ஓர் காதலுண்டோ ? மூவுலகில்
பாமதிபோல் ஓர் தேவமங்கையும் உண்டோ?
அன்புத் துறவில் நிலைத்த அபூர்வக்காதல்-பாமதி

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-26-7-2023

# சந்திரவதனி

---

வண்ண மலர் கண்டு வாசத்தில் மெய்மறந்து
மதுவுண்டு களித்த கருவண்டு-மது மயக்கத்தில்
மயங்கி கிடக்க பூஞ்சோலை வந்த பூவை
பூக்களே காதல் கொள்ளும் பாவை

பூவிழிகளும் நாவல் கனியென்று கருவண்டைப் பொறுக்கி
அழகை வியக்க, கைத்தலத்தின் கதகதப்பில்-
மது மயக்கம் தெளிய கண்விழித்த வண்டு
மதிவதனம் கண்டு மயங்கியது
பங்கய கரம் கண்டு மலரோ என வியந்தது

அந்தி வர பங்கயம் குவிந்துடுமே-அச்சத்தில்
வண்டு பறந்திட பாவையும் வியந்தாள்-ரீங்காரம் கேட்டு
பறந்தது வண்டென்று அறிந்த மடந்தை
நாணிப் புன்னகை புரிந்தாள்

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-27-7-2023

# என் அழைப்பு

---

நாற்பது வருட விசுவாச வாழ்வில்-இதுவரை
நானறியாத ஓர் தளர்ச்சி-இனம்புரியாத வேதனை
ஏன் இத்தனை துன்பம் ? தோல்வி என் வாழ்வில்

நிம்மதியிழந்த மனம்-ஆற்றோரம் உலாவி
ஆண்டவனை வேண்டி ஏகாந்தத்தில் கதறி
இறைவா என்னோடு பேசும் என விசும்பிட
*உன்னோடு பேசுவேன்* இறைமொழி
நெஞ்சுக்கு நிம்மதியான அருள் மொழி

சில நாள் கழித்து, சீயோன் தேவாலய ஆராதனைக்கு
நண்பர் அழைக்க. பாஸ்டர் ரோஷான் வழியே
இதோ என் மகன் என்று என்னை சுட்டிய இறைவன்

தோல்விகளும், இழப்பும் என் மகனைப் பண்படுத்த
நான் அருளும் என் அருட் கொடைகள்
என் மகனிடம் சொல்லும்-சேதி சொல்லிய என் தந்தை
இறைமகன் நீங்கள் வாழ்த்தி என்னை முத்தமிட்ட போதகர்

குழம்பிய மனதோடு ஞாயிறு திருப்பலி கண்டு,
திரும்பிவரும் வேளை-ஆயர் இல்லம் முன்னால்
தரையில் கிடந்த ஓர் காகிதம்

முன்னே சென்றவர் பாராது கடந்து போயிட
என் மனம் எடு அது உனது எனச் சொல்லிட
*வெற்றியல்ல விசுவாச வாழ்வே உன் அழைப்பு*
புன்னகை சிந்தும் இயேசுவின் திருவுருவத்தில்
பொறித்த அன்னை தெராஸாவின் வாசகம்
என்னை திடப்படுத்தும் தேவன் மொழியானது

17.5.2000

ஆலய வழிபாட்டில் என் மனம் இலயித்திட
அதிரவைத்த பாரிய குண்டு வெடிப்பில்
ஆலயமும் என் மனமும் ஒன்றாய் அதிர்ந்திட
*உன் அண்ணாவை என்னிடம் அழைத்தேன்*

இறைவனின் திருமொழி என் காதில் ஒலித்திட
நெஞ்சம் பதைக்க, ஆற்றாமையால் அழுது
என் சித்தம் அன்று உம் சித்தம் என்றேன்
அகால மரணமடைந்த அண்ணாவின் வயதோ ஐம்பது
தலைமகனை இழந்த தாயின் துயரோ இமயத்திலும் பெரிது

தலைவனை இழந்த துணைவியின் துயரோ
சொல்லும் வார்த்தையில்லாத் துயரம்
தந்தையை இழந்த குழந்தைகளோ-
நாளும் அப்பா எனக் கதறும் அவலம்

அல் குரான் படிக்க, நூல் நிலையங்களில் தேடியும்
இஸ்லாமிய நண்பர்களிடமும் கேட்டும்,
கை கூடாத நிலையில்-அத்தானிடம்
இறைவன் எனக்காய் அல்குரானை அனுப்புகிறார்
வாங்கி வாருங்கள் வேடிக்கையாய் நான் உரைக்க
அற்புதமாய் சவுதி அரேபியா சீமாட்டி வழியாய்
அல்குரானைப் பரிசளித்த இறைவன்

ஓர் இரவு என் குடிசையில் படுத்திருந்து
பீபா வானொலியில் சகோதரர் இராஜேந்திரம் நடத்திடும்
இயேசு அழைக்கிறார் ஜெப வழிபாட்டைக் செவிமடுத்த நேரம்

அப்பா நீயே என் சொத்து, உனையனறி யாரும் எனக்கில்லை
ஏழை என் வாழ்வு ஓலைக் குடிலில், என் நண்பர்களோ
வெளி நாட்டில் மனம் வினவிட தடைப்பட்ட வானொலியில்

இறைவா ஓலைக்குடிலில் வாழும்
உம் மகன் ஜெபத்தை கேளும்
ஓர் வீடு அவருக்கு அருளும்-

ஆச்சரியப்பட்டு மறுநாள் Back to the Bible உடன் தொடர்பு கொண்டபோது
ஏற்கனவே இலங்கையில் ஒலிப்பதிவு செய்யப்பட்டு- பிலிப்பைனஸ்
பீபா வானொலியில் ஒலிபரப்படும் இறைசெய்தி இது-
உங்கள் கதை ஆச்சரியம்-கிடைத்த மறுமொழி.

நாட்கள் செல்ல- அத்தான் கட்டிய புது வீட்டில்
அக்கா நீ இரு என்று சொல்லிட
குடிசையில் வாழ்ந்த என் விண்ணப்பம் நிறைவேறிட
***வீடு என்னுள் என்பதை நான் தெளிந்து அறிய***
பாலையை நான் கடக்க வைத்த பரம்பொருள்

பௌத்த விகாரையில் -புத்த பெருமானை வழிபட்டு
ஐயனே நீர் யார் ? இறை அவதாரமா?
உம்மை அறியும் ஞானம் எனக்கருளும்
கருணாமூர்த்தி நீர் என மனம் இயம்பிட

***தன் சிரசைத் திருப்பி என்னை நோக்கிய பெருமான்***
மெய் சிலிர்க்க எல்லாம் இறை மயம்
அறிந்து போற்றக் கிடைத்த அபூர்வ அனுபவம்.

நான் தேடித் தவித்த இயேசுவின் திருவுருப் படத்தை-அதிசயமாய்
என் புத்தகம் ஒன்றினுள் கண்டு ஆனந்தக் கூத்தாடிய மனம்

சிங்கப்பூர் செல்ல என்னிடம் விடை பெற வந்த
அருட் சகோதரி பிரான்ஸீவாவிடம் ஆலயத்தில்
அங்கோர் தாய் எனக்கோர் படம் தருவார்-அன்னையே
வாங்கி வாருங்கள் வேடிக்கையாய் கூறிய கதை

அருட்சகோதரி பிரான்ஸீவா மூலம்
அறியாத தாய் வழியே -அற்புதமாய்
தம் உருவை அனுப்பி வைத்த என் தந்தை

புனித அந்தோனியாரை வணங்கிட
வீழ்ந்த செவ்விரத்தை மலர் அச்சத்தை கூட்டிட
மாதா கோயிலில்-கொஞ்சி மகிழ்ந்த-தேவ அன்னையின
திருவுருவம் வேதனையைக் காட்டிட
பதிவுத்தபாலில் புலிகளிடமிருந்து வந்த அச்சுறுத்தல்.

புலிகளிடம் சிறைப்படுவதை
புனிதரும், தாயும் சொல்லாமல் சொல்ல
சிறையிருந்த நாட்கள் மூன்றும்
மனம் வேதனையில் இறைவனை கூவியழைக்க
மூன்றாம் நாள்-உணவு சுற்றிய காகிதத்தில்
***உண்மை***
***உனக்கு விடுதலை அளிக்கும் என்று சேதி***
ஆறுதல் தர, இறை அருளிய விடுதலை

கப்பமாய் செலுத்திய ஒரு இலட்சம்
என் ஆருயிர் நண்பனின் அன்பளிப்பாக-என்னே
என் தந்தையின் பேரன்பு போற்றிப் புகழ்ந்த மனம்

என் தாய் மரிக்கும் நாள் அன்று காலை அலுவலகத்தில்
பூக்களை வைத்து இயேசுவின் திருவுருவை பூஜிக்க
சூடிய மலர்கள் தரையில் வீழ்ந்திட நொந்த மனம்

மதியம் வீடு வந்த மோட்டார் சைக்கிள் கவிழ்ந்திட
காயங்கள் ஏதுமின்றிக் காத்த இறைவன்-மருந்து வாங்கி
வீடு வந்து தாயின் தலையை மடியிலிருத்தி-
மருந்தை பருகிடக்கொடுத்திட-
சிறிது பருகியவர் தலை மெல்லச் சரிந்திட
அம்மா எனக் கதறி அழுதவன்-
தொலைபேசியில் மருத்துவரை அழைத்திட
அதிசமாய் விரைந்து வந்த மருத்துவர் அல்மெய்டா
அன்னையின் இறப்பை உறுதி செய்திட
***தாயின் துன்பம் நீங்கிய சுதந்திரத் திருநாள்***

இப்தார் நிகழ்சியினபோது, இளம் சிறுவர் அல்குரான் ஓதிட
அல்லா.:.கு அக்பர் ஆரோகணத்தில் ஒலிக்க
என் தேகம் மயிர்கூச்செறிய
எங்கும் அவரே என்ற ஆனந்தம்

என் பிறந்த நாள் அன்று அதிகாலை
ஆலயம் சென்று நன்றி கூறி
அன்னையின் கல்லறை சென்று ஆசீர் வேண்டி
என்னை அநாதையாய் விட்டு விட்டு
அம்மா நீ மட்டும் வானகம் போனதென்ன?

துயர் தீர அழுது சில அடிகள் நடந்திருப்பேன்
என்னைச் சூழ்ந்து எங்கும் தெய்வீக நறுமணம்
என சுவாசத்தை தெய்வீகவாசம் நிறைத்திட
இதயத்தில் இனம்புரியாத ஆனந்தம்.

என் அனுபவத்தை கேட்ட இஸ்லாமிய பெரியவர் சொன்னர்
மகனே உம் தாய் சுவனத்தில் வாழ்கிறார்
வந்து உம்மை வாழ்த்திச் சென்றிருக்கிறார்
மகிழ்ந்திரு, சுபான் அல்லா

வெள்ளவத்தை இராகிருஷ்ண ஆலயத்தில் வழிபாடு நடந்திட
மெய் சிலிர்க்க எங்கும் இறைமயம் எல்லாம் இன்பமயம்
என அக்களித்த மனம்-காலை உணவளித்து
விருந்தாய் என்னை உபசரித்த சுவாமி ஆத்மகனானந்தாஜி

உலாச்செல்லும் வேளையில் இஸ்லாமிய நண்பர்
தம்மோடு பள்ளிக்கு அழைக்க- மகிழ்வோடு
வந்தவனுக்காய் -கதவைத் திறக்க-உள்ளே தொழுகை

என் உள்ளம் பரவசம் கொள்ள
கால்கள் என்னையறியாது முழுந்தாட்படியிட்டு
தரையை முத்தி செய்திட
மாஷா அல்லா என்று வாழ்திய மனம்

தேடல் ஓய்ந்து மனம் அமைதியில் மூழ்கிட
சிந்தை அழிய -சித்தமெல்லாம் ,
என் சித்தமன்று உம் சித்தம் என்று
சித்தனாய் வாழ, வாழ்வே சச்சித்தானந்தம்

தூக்கம் கலைந்து விழிப்புணர்வில் நிலைக்க
இருமை கடந்து-எங்கும் அன்பே சிவமான தவம்
மாயை கலைய தெளியும் மனம்.

எல்லையில்லாப் பேரன்போடு-எல்லாமுமாய்
எல்லாவற்றிக்குமேலாய்-அப்பா
உம்மை நான் அன்பு செய்யவேண்டும்
உம்மை அன்ப செய்ய தடையாய்
உள்ளதெல்லாம் இழக்கவும், மறக்கவும்
இன்முகத்தோடு துறக்கவும்.
வரம் அருளவேண்டும்
ஜெபமும், தவமும், வாழ்வுமானது

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-27-7-2023

# என் அன்பு நண்பர்கள்

---

புள்ளி வைக்காது-கள்ளங் கபடமற்ற நட்பால் போட்ட
அன்புக்கோலம்-பள்ளி நட்பு ஆண்டுகள் பலபோனபின்பும்
அழியாத கோலம்-அணையாத தீபம்

பாடம், படிப்பு, ஆட்டம், பாட்டமான அழகிய
பள்ளி வாழ்வு இறை தந்த கொடையாக
இன்று வரை நிலைக்கும் நட்பு

பள்ளி வாழ்வும் கலைந்த கனவாக
நண்பராய் சிலரே நெஞ்சில் நிலைக்க
எண்ணி இன்புற இன்பக் கனவாய்
இனிய நினைவாய் நிலைத்த நட்பு

எண்ணிக்கையின் பெருக்கமல்ல- நட்பு
எண்ணங்களின் பரிணாமம், புரிந்துணர்வின் பேரின்பம்.

பாசமாய் மச்சான் என அழைக்கும் ஜோய்-
நேசமாய் ரவி என அழைக்கும் அன்டன்
Pax என விளிக்கும் அன்னதாஸ்
டேய் என்னடா செய்கிறாய்-ஜெகன்

ஐயா என அழைக்கும் கிறிஸ்டி
ரவி என கூவி மகிழும் செயஸ்தியான்
ஹலோ ரவி என்னும் சுவி

நட்பின் மற்றோர் பரிமாணத்தில்
அறுசுவையிலும் இனிதான அறிவுப் பசிக்கு உணவாய்
அரிய நண்பர்களாய் ஆசான்களாய்
அருட் தந்தையர் மிலர், போல் சற்குணநாயகம்
CP.இராஜேந்திரம் , றெக்ஸ் ஜோசப்
நன்னூல் வழியாய் குருவாய் மகான் ஓஷோ

பெறா மகனாய் எனை அன்பு செய்த
என் பெற்றோராய் -அன்புத் தம்பதிகளாய்
ரிச்சர்ட் பெர்ணான்டஸ்-மம்மி, றெக்ஸ் -ராணி
ஜஸ்டின் இராஜேந்திரம் -உமா டீச்சர்

என்னைத் தன் குழந்தையாய் கண்ட
அருட் தந்தை ஹரல்ட ஜே வெபர்
அன்புகாட்டிய அருட் தந்தையர், மிலர்
டெல்மாமோ, ஹேபியர், லோரியோ

அன்போடு பெயர் மாற்றி *Pax* என அழைத்த ஆசான்
சவரிராஜா மாஸ்டர்

கவிதை உறவாய் வந்து என் கவிதைகளுக்கு தோள் தந்தாய்
கவிஞனாய் நான் எழுத இரசிகனாய் எனை ஊக்குவித்தாய்
இரசிகனின்றி கவிஞனில்லை, இரசனையின்றி கலைகளுமில்லை

நட்பும் கலையே நண்பா விழுந்து எழுவதால்
நாம் புரிந்து கொள்கின்றோம்-பள்ளிப்பருவ நட்பு
உதறுகாய் போல் ஒட்டிக கிடந்தது
காலம் செல்ல பழகிக் களித்து பாசம் கனிய
ஓடும் புளியம் பழமுமாய் கருத்துகளுக்கு மதிப்பளித்து
மெல்ல துறவு பூணுகின்றது.?

உங்களை புண்படுத்தும் எண்ணம் எனக்கில்லை
-காலம் போகின்றது, இனி காண்போமா கேள்வியானது
வாழ்வில் தேடல் என்று ஏதும் எனகில்லை
எல்லாம் எனக்குள்ளே என்பதைஅனுபூதியில் உணர்வதே
வாழ்வின் இரகசியம்.

இரு வழிப்பதை வாழ்வு-
ஜனனம், மரணம் -ஒரு கதவின் இரு பக்கங்கள்
வாழ்வு அழிவதில்லை-
மரணம் வழியாய் தொடரும் புதுப்பயணம்

இறை தந்த அன்புக் கொடையே நட்பு
காலில் முள் தைத்தால் பிடுங்கி விடலாம்
கருத்தில் முள் தைத்தால் புரிந்து கொள்ளலாம்
நட்பை துறந்து விடலாமோ?
உன் நட்போ என்றும் அரிதினும் அரிதானது.
அன்பைப்போல் உயர்ந்தது ஏதுமில்லை
அன்பே சிவம் பொய்யில்லை

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-27-7-2023

# என்னை மறந்ததேன் தென்றலே?



கண்பார்த்து நெஞ்செழுதிய காதல் காவியம்
நூலறுந்த காற்றாடியாய் அல்லாட-கண்பட்டதோவென
காதலும் கனவாய் கலைந்ததென்ன?-புண்பட்டு
நெஞ்சம் சுக்கு நூறாய் நொருங்கியதென்ன?

என் பெண்சிட்டு பறந்து போனதென்ன?
ஒற்றைக் குயிலாய் மனம் கரைந்திட
புயலழித்த நந்தவனமாய் மனம் மாறியதென்ன?

நெஞ்சமே கோயிலாகி, அவள் நினைவே சுகந்தமாகி
அஞ்சுகம் வாழ்ந்த நெஞ்சம்
வெற்று கூடானாதே-நிம்மதி தேடி -மனம்
நஞ்சைத் தேடும் நிலைக்கானதே

அலைபோல்-நெஞ்சில் அவள் நினைவுகள் அலைமோத
கண்ணீர் பூக்களை விழி கோர்த்து மனம் தள்ளாட
நெஞ்சப் பூவனமே பாலைவனமானதடி-காதல் பைங்கிளி
பறந்திட-என் பூ மனம் கலைந்த கூடானதடி

இதயமும் அவளை எண்ணித் துடிக்க
உதயம் காணாத இரவாய் மனம் இருளில் தவிக்க-
காதல் நிலவே ஏனடி இந்தக் கொடிய அமாவாசை?

சீதையின்றி அசோவனமும், **ஸ்ரீராமனுக்குச்** சோகவனமானதடி
நிலவே நீயின்றி-என் வானமும் காரிருளில் மூழ்குதடி

கண்டு விழிகள் பூத்து மலர, கடந்து செல்கையில் சுவாசம்
பூவாசத்தால் நிறைய, அலையலையாய் பொங்கும்
கவிதைகளோ மனதில்-பூம்பாவையின்
அழியாத கோலங்களோ இதயத்தில்

என் பொன்வானத்து வெண்ணிலவும் கண் மறைந்திட-
என் பூங்குயிலின் ஆனந்தகானமும் ஓய்ந்திட-
நினைப்பதற்கு அவளைத் தவிர வேறு நினைவில்லை
அவளை மறப்பதற்கும் மதுவைத் தவிர மருந்து ஏதுமில்லை
தேவதாஸாய் என்னை உருமாற்றிய தேவதை என் பார்வதி

எல்லாம் மாயையான உலகில் காதலும் கானல் நீரே
எண்ணும்போது மலைத்தேனாய் இனித்துக்
கவிதை எழுதும்போது கம்பனாய் மகிழ்ந்த நெஞ்சு
ஆலகாலம் உண்டதுபோல் இன்று வாடுவதென்ன?
இதயராகமும் முகாரியாய்ப் போனதென்ன?

பூவனத்திற்குள் பூகம்பம் வெடிக்க
பொன்மணி பூட்டிய காதல்
பொன்விலங்காய் மாறியதென்ன?

காதல் சிறகடித்து வானில் பறந்த குயிலும்
இறகொடிந்து மண்ணில் வீழ்ந்ததென்ன?
தோகை விரித்தாடிய கலாபமயிலும்
கால்கள் முறிந்து நொண்டியானதென்ன?

பாட்டும், பரதமும் மறந்த இதயம் முகாரி இசைக்க
செவ்வாயில் புன்னகை வைத்தாய்-செங்குங்குமத்தை
நெற்றியில் வைத்தாய், கண்களில் மை வைத்தாய்
கார்குழலில் மலர் வைத்தாய், நெஞ்சில் உன்னை வைத்த
என் நெஞ்சுக்கு ஏனடி நஞ்சைத் தந்தாய்? இதயம் துடிக்குதடி?

காதணி ஆட, கைவளை நாண பொன்னணி சூழ்ந்த சங்குக்கழுத்து சாய
காதலன் தோள் தேட-நெற்றிச் சுட்டியும் நீள் விழிகளும் மையலில் தோய
என் பூ நெஞ்சில் காதலை குத்திய மூக்குத்தியழகி எங்கே?

கண்ணீர் பொங்கிட-கவி நெஞ்சம் நஞ்சைத் தேடிட
காதலே என் காதலே! என்னை மறந்ததும் என்ன?
உன்னை நினைந்தே நான் மடிவதும் காதல் ஆனதுமென்ன?

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-27-7-2023*

# காலங்களில் அவள் வசந்தம்

---

உன்னோடு வாழ்ந்த காலங்கள் ஒரு கணமாக
உனைப் பிரிந்த நொடியோ பல யுகமாக,
ஈரவிழிகளும், நொருங்கிய இதயமும் என் சொந்தமாக
என்னை வாட்டும் காதற் சோகங்கள்






கார்குழலில் நெய் எழுதி, சேல் விழிகளில் மை எழுதி
காதலால் நெஞ்சில் என்னை எழுதி
கணவனாய் என்னை வரித்த காதல் கங்கை
என் பூவனத்தில் நாளும் பூபாளம் பாடிய தேவமங்கை

கோயிலாய் வீட்டை மாற்றிய குலமகள்
என் வாழ்வில் காதல் பரதத்தை அரங்கேற்றிய
கோலமயில், காதல் தீபத்தை ஏந்திய தேவதை
கண் மறைந்தாளோ?, விண் சென்றாளோ?

மல்லிகையும், முல்லையும் மணக்க, மதி நுதலில்
குங்குமம் ஜொலிக்க, மணமகளாய் மாலையிட்ட மங்கை
அக்கினியை வலம் வந்து கைத்தலம் எனக்குத் தந்து
வாழ்வை வேள்வியாக்கிய நங்கை

திருத்தலம் நோக்கிய தீர்த்த யாத்திரையில்
தன்னை ஆகுதியாக்கி, என்னைத் தந்தையுமாக்கி
பேரின்பம் தந்தவள் பிரிந்து போனாள்-மாலை
வருமுன் காலன் பறித்திட வாடி உதிர்ந்துபோனாள்

வருவதா? போவதா என உயிர்காற்று தள்ளாட
துடிப்பதா? ஓய்வதா என இதயம் திண்டாட-என்னைத்
தாங்கிய ஆலும் விழுந்ததே-என் மனமும்
ஒரு கண்ணாடிபோல் நொருங்கியதே



உன்னில் உலாவிடும் உயிர் மூச்சும் எனதே
உனக்குள் துடிக்கும் இதயமும் எனதே
நீ பிரியும் கணத்தில்-மரணம் உனக்கில்லை
நான் வாழும் கணமெல்லாம் சாவும் உனக்கில்லை

காதல் சாவதில்லை, மண்ணில் உன்னை புதைத்து
நெஞ்சில் நினைவுகளை விதைத்தேன் கண்மணி
கண்ணில் நீர் எழுதாமல்-உன்னைக்
காவியமாய் நெஞ்சில் வடித்தேன் என்தன் பொன்மணி

வாடும் மலர்களை கல்லறையில் சாற்றாமல்-வாடா மலராய்
உன்னை நெஞ்சில் சூடி-தீபங்கள் ஏற்றாமல் என் காதல் தீபமாய்
உன்னை ஏற்றி- தூபங்கள் காட்டாமல்
என் காதல் சுவாசமாய் உன்னைச் சுவாசிக்கின்றேன்

பொன்னை விரும்பும் உலகில்-என்னை விரும்பியவளே தூங்கு
உன் உறக்கம் கலையாதிருக்க கண்மணி பாடுகிறேன்
காதல் தாலாட்டு, மண் மஞ்சத்தில் நீ உறங்க-என்
மனமோ மலர் மஞ்சமோ என் நெஞ்சத்தில் நீ உறங்கு
உன் மஞ்சம் என்றும் நானடி-என் காதல் தஞ்சம் நீயடி



நூற்காத தவத்திற்கும் கேளாத வரத்திற்கும்
இறைவன் தந்த தெய்வீக கொடையே-போதும் என்ற சொல்லால்
வாழ்வை பூவனமாக்கிய தேவதையே-நீ
போனபின் வாழ்வே பாலைவனமான வேதனை

நெஞ்சமே கோயிலாக-அஞ்சுகமே நித்தம் உன்னை
நினைந்திருப்பின்-நித்திலவல்லி, செல்வப் பூங்கோதை
கத்தும் கடலும், கருவான் நிலவும் சாட்சியாக
என் சித்தம் நினைப்பு, செய்கை உள்ளவரை
என் உள்ளம் உன்னை ஒரு போதும் மறவாதிருப்பேன்

உதிரமே நெய்யாக, உயிரே தீயாக என்னை எரிக்கின்றேன்
உயிர் துடிக்க, சுவாசம் ஒடுங்க ஒரு மெழுகுதிரியாய் உருகுகின்றேன்
ஏதுமில்லா என் உலகில் யாதுமாகி நின்றவளே
போதுமென்ற பொன்மனம் படைத்த தேவதையே

பூஜைக்கு வந்த மலரல்ல நீ-நான் பூஜீக்க இறை தந்த கொடை நீ
உன்னை பிரிந்த பின் உயிர்வாழ்தல் கொடிதடி
நீயில்லா உலகு எனக்கோ நரகமடி-நீ வாழும்
**உலகே என்தன் சொர்க்கமடி**

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra-28.07.2023*

# திருமகள்

---

மையெழுதிய கயல்கள் காதல் சொல்ல, அழகு மெய்யோ
காமன் ஐங்கணையாய் என்னைக் கொல்ல, முத்துப்பல்லும்,
மோகனப் புன்னகையும் கவிதை சொல்ல-சிற்றிடை
மேகலையும், சிந்துபாடும் சிலம்பிற்கு சந்தம் சொன்னதே,



கண்ட விழிகளில் காதல் மலர, என் காதலே
நீதான் என நெஞ்சம் துடிக்க, மெல்லிடையாள்
மேகலையும் குதுாகலிக்க, நாணம் சூடி சிவந்த நங்கை
காதல் கீதம் பாடும் வானம் பாடியாய் மங்கை

கார்குழலில் பூவனம், அழகு மெய்யோ மலர் வனம்
பொன்மேனியில் பூமணம், என் மனதில் காதலில் நறுமணம்,
கண்வழியே காதலை நெஞ்சில் துாவிய காதல் மகள்
கலைமகளோ?, திருமகளோ? காமன் மகளோ?

பொன்னணியும், பூவணியும் பூண்ட திருமகளாய் நங்கை
கண்களில் கனவு உலாவ, நெஞ்சில் காதல் உலாவர
பார்த்த விழிகள் சுவைக்க இனிக்கும் காமத்துப்பால்
காதலாகித் தவிக்க என்னை ஏங்க வைத்த பெண்பால்

ஆண்டாள் என்னைச் சூடிக்கொள், வற்றாத அன்பால்
என்னைக் கட்டிக்கொள், காதல் சொல் என
கண்கள் கவிதை சொல்ல, நீர் மொள்ள வந்த மோகினி
என் இதயத்தை அள்ளிச் சென்ற காமினி

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-19-08-2013*